# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

## சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

*ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரு. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.*

*வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.*

## வேண்டுகோள்

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.


*விவரங்களுக்கு:*

*தொலைபேசி:*
7 1 2 3 1



ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

## ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

| தொகுதி—60 | ஜூலை 1980 | இதழ்—7 |
| --- | --- | --- |

### பொருளடக்கம்





# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை

—திருமூலர்


| தொகுதி 60 | ரௌத்திரி ஹு ஆடி மீ | இதழ் 7 |
| --- | --- | --- |





यस्य देवे परा भक्तिर्यथा देवे तथा गुरौ।
तस्यैते कथिता ह्यर्थाः प्रकाशन्ते महात्मनः ॥

யஸ்ய தேவே பரா பக்திர் யதா தேவே ததா குரௌ।
தஸ்யைதே கதிதா ஹ்யர்த்தா: ப்ரகாசந்தே மஹாத்மன:॥

— ச்வேதாச்வதர உபநிஷதம்

எவருக்குத் தெய்வத்தினிடம் பக்தி இருக்கிறதோ, தெய்வத்தினிடம் போலவே குருவினிடமும் பக்தி இருக்கிறதோ அந்த மகாத்மாவிற்கு உபநிஷதங்களில் கூறப்பட்ட பொருள்கள் தாமாகவே பிரகாசிக்கின்றன.

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் எல்லார்க்கும் அடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிசார்ந்தார் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக் கம்மானே

— ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள்



# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (மகிமாசரணிடம்): நீ ஏன் வாழ்க்கையை ஆழம் காண முடியாத பாழுங் கிணறு என்றும், வழி தெரியாத அடர்ந்த காடு என்றும் சொல்கிறாய்? ஆரம்ப காலத்தில் வேண்டுமானால் ஒரு சாதகன் அவ்விதம் நினைக்கலாம். ஆனால் அவன் இறைவனைப் பற்றிக்கொண்ட பிறகு உலகத்தைப்பற்றிப் பயப்படுவதற்கு என்ன இருக்கிறது? இறைவனைப் பற்றிக்கொண்டு இறைவனையே சார்ந்து வாழும் ஒருவனுக்கு இந்த உலகம் ஓர் ஆனந்த மாளிகையாகவே தோன்றுகிறது.

"இந்த உலகம் ஆனந்தம் பொங்கும் ஒரு மாளிகையாகவே விளங்குகிறது. இங்கே நான் சாப்பிடுவேன், பருகுவேன், ஆனந்தமாக இருப்பேன்."

நீ எதற்காகப் பயப்பட வேண்டும்? பகவானை உறுதியாகப் பற்றிப் பிடித்துக்கொள். இந்த உலகம் முட்கள் நிறைந்த காடாக இருந்தால் தான் என்ன? நீ உன் கால்களில் செருப்பை அணிந்துகொண்டு அந்த முட்காட்டில் நடந்து போக முடியாதா? யாருக்காக நீ பயப்பட வேண்டும்? கண்ணாப்பூச்சி விளையாட்டில் ஒரு முறை தாய்ச்சியைத் தொட்டுவிட்ட பிறகு கண்ணைக் கட்டியிருக்கும் துணியை அவிழ்த்து விடலாமே! அதன் பிறகும் நீ கண்ணைக் கட்டிக்கொண்டு விளையாட வேண்டிய அவசியம் என்ன இருக்கிறது?

ஜனக மகாராஜா ஞானம், கர்மம் என்ற இரண்டு கத்திகளையும் தமது இரண்டு கைகளில் பிடித்து ஒரே சமயத்தில் சுழற்றக் கூடியவராக இருந்தார். சாமர்த்தியமாக விளையாடக்கூடிய கைதேர்ந்த ஆட்டக்காரனுக்கு எந்தவிதப் பயமும் இல்லை.

**திங்கள், ஜூன் 4/1883**

இன்று பலஹாரிணி காளிபூஜை நாளாகும். இன்று அமாவாசை இரவில் பலஹாரிணி பூஜை நடைபெற இருந்தது.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் தட்சிணேசுவரக் காளிகோயிலில் இருக்கும் தமது அறையில் அமர்ந்திருந்தார். பக்தர்கள் அவரைத் தரிசிப்பதற்காக வந்தபடியே இருந்தனர்.

பலஹாரிணி காளிபூஜைக்கு முதல் நாளே அதாவது ஞாயிற்றுக்கிழமையன்றே ம—, குருதேவரைத் தரிசிப்பதற்காகத் தட்சிணேசுவரம் வந்துவிட்டார். ஞாயிற்றுக்கிழமை இரவு காத்யாயனி பூஜை நடைபெற்றது.

காத்யாயனி பூஜை நடைபெற்ற இரவு குருதேவர் தெய்விகப் பரவசத்தில் ஆழ்ந்திருந்தார். அவ்விதம் தெய்விகப் பரவசத்தில் லயித்தபடியே அவர், 'நாட்மந்திர்' என்று சொல்லப்படும் பவதாரிணிதேவியின் சந்நிதிக்கு எதிரே உள்ள மண்டபத்தில் நின்றுகொண்டிருந்தார். அப்போது அந்த மண்டபத்தில் தெய்விகப் தோய்ந்த நிலையில் அவர் ஜகன்மாதாவிடம், "அம்மா, நீதான் பிருந்தாவன க்ஷேத்திரத்தில் உள்ள காத்யாயனிதேவியாக இருக்கிறாய் நீயேதான சுவர்க்கலோகமாகவும், நீயேதான் பூலோகமாகவும், நீயேதான் பாதாளலோகமாகவும் இருந்துகொண்டிருக்கிறாய். உன்னிடமிருந்தே ஹரியும் பிரம்மாவும் பன்னிரண்டு கோபாலர்களும் தோன்றியிருக்கிறார்கள். அதுபோலவே உன்னிடமிருந்துதான் தசமகாவித்யைகளும் தசாவரங்களும் தோன்றியிருக்கின்றன. அம்மா, இப்போது நீ

என்னை உன்னுடைய எந்த வடிவத்தைக் கொண்டு கரையேற்றுவதாக இருக்கிறாய்?'' என்று பலவாறு சொல்லிக் கொண்டிருந்தார்.

இவ்விதம் குருதேவர் பாடிக்கொண்டும், அத்துடன் ஜகன்மாதாவிடம் யாசிக்கொண்டும் ஓரேயடியாகத் தெய்விகப்பிரேமையில் மூழ்கியிருந்தார். அதே நிலையில் அவர் தமது அறையை அடைந்து கட்டிலின் மீது அமர்ந்து கொண்டார்.

காத்யாயனி பூஜையின்போது இரவு இரண்டாம் ஜாமம் வரையிலும் பக்தர்கள் ஜகன்மாதாவின் புகழைப் பாடிக்கொண்டும் நாமஜபம் செய்துகொண்டும் இருந்தனர்.

திங்கட்கிழமை காலையில் பலராமும் மற்றும் பல பக்தர்களும் குருதேவரைத் தரிசிக்க வந்தனர். அன்று பலஹாரிணி காளிபூஜை நடைபெற இருந்ததை முன்னிட்டு, திரைலோக்கியரும்* மற்றும் காளிகோவில் சொந்தக்காரர்களும் தங்கள் குடும்பத்தோடு தட்சிணேசுவரம் வந்திருந்தார்கள்.

அப்போது காலை ஒன்பது மணி இருக்கும். குருதேவர் புன்சிரிப்புத் தவழக் கங்கைக் கரையின் மீது அரைவட்ட வடிவத்தில் அமைந்திருக்கும் தாழ்வாரத்தில் அமர்ந்திருந்தார். ம-வும் குருதேவரின் அருகில் இருந்தார். குருதேவர் அப்போது விளையாட்டாக ராக்காலின் தலையைத் தமது மடியின்மீது வைத்தார். ராக்கால் ஒன்றும் பேசாமல் அதே நிலையில் படுத்திருந்தார். கடந்த சில நாட்களாகக் குருதேவர், ராக்காலை சாட்சாத் பாலகிருஷ்ணனாகவே கருதி வந்தார்.

குருதேவரின் முன்னால் திரைலோக்கியர் காளிதேவியைத் தரிசிக்கும் பொருட்டுக் கோவிலுக்குச் சென்றுகொண்டிருந்தார். அவருடன் வேலையாள் ஒருவன் அவருக்குக் குடைபிடித்தபடி சென்றுகொண்டிருந்தான். குருதேவர் ராக்காலிடம், ''ஏய் ராக்கால், எழுந்திரு, எழுந்திரு!'' என்று கூறினார்.

உட்கார்ந்திருந்த குருதேவருக்குத் திரைலோக்கியர் நமஸ்காரம் செய்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (திரைலோக்கியரிடம்) : என்னப்பா, நேற்றிரவு ஏன் கதாகாலட்சேபம் நடைபெறவில்லை?*

திரைலோக்கியர்: ஆமாம், நடைபெறவில்லை. நேற்றிரவு நடந்திருக்க வேண்டிய கதாகாலட்சேபத்திற்கு ஏற்ற வகையில் ஏற்பாடுகளைச் செய்ய இயலாமற் போய்விட்டது.

ஸ்ரீராமகிருஷ்ணர் : ஏதோ நடந்தது நடந்து விட்டது. மீண்டும் இதுபோல நடந்துவிடாமல் பார்த்துக்கொள். கோவிலில் வழக்கத்தில் இருந்துவரும் நடைமுறைகளையொட்டி ஆண்டு தோறும் நடத்துவது நல்லது.

திரைலோக்கியர் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியதற்கு ஏற்ற பதிலைத் தெரிவித்துவிட்டு அங்கிருந்து சென்றார். சிறிது நேரத்திற்குப் பிறகு விஷ்ணு கோவிலின் அர்ச்சகர் ராம் சட்டர்ஜி ஸ்ரீராமகிருஷ்ணர் இருந்த இடத்திற்கு வந்தார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் : ராம்! திரைலோக்கியரிடம் 'கதாகாலட்சேபம் நேற்று நடைபெறாமல் போய்விட்டது. திரும்பவும் இதுபோல நடைபெறாமல் பார்த்துக்கொள்' என்று கூறினேன். இவ்விதம் நான் சொன்னதில் ஏதாவது தவறு இருக்கிறதா?

ராம் சட்டர்ஜி : இதில் என்ன தவறு இருக்கிறது? நீங்கள் சரியாகத்தான் சொல்லியிருக்கிறீர்கள். கோவில் வழக்கம் எதுவோ அதுபோலவே வருஷந்தோறும் நடப்பது தானே நல்லது.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் (பலராமரிடம்): இன்று நீ இங்கேயே பகல் உணவைச் சாப்பிடு.

பகல் உணவு உட்கொள்வதற்குச் சற்று முன்பு குருதேவர், தாம் முன்பு தெய்விகப் பித்துக் கொண்டிருந்த நாட்களைப் பற்றிய பல விஷயங்களைப் பக்தர்களுக்குக் கூறினார். ராக்கால், பலராம், ம-, ராம்லால் ஆகியோரும் மற்றும் இரண்டொரு பக்தர்களும் அங்கு அமர்ந்திருந்தார்கள். அவர்கள் ஸ்ரீ ராம

*திரைலோக்கியர் மதுரபாபுவின் மகனும் ராணி ராஸ்மணியின் பேரனும் ஆவார். அவர் 1871—ஆம் ஆண்டு முதற் கொண்டு தட்சிணேசுவரக் காளிக்கோவிலின் நிர்வாகத்தை மேற்கொண்டிருந்தார்.

*காத்யாயினி பூஜை நடைபெறும் இரவில் காளி கோவிலில் கதாகாலட்சேபத்திற்குக் கோவில் நிர்வாகிகள் ஏற்பாடு செய்வது வழக்கம்.

கிருஷ்ணர் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர்: ஹாஸ்ரா எனக்கு அடிக்கடி உபதேசம் செய்ய ஆரம்பித்துவிடுகிறான். 'நீ ஏன் இந்த இளைஞர்களைப்பற்றி இவ்வளவு கவலைப்பட்டுக்கொண்டிருக்கிறாய்?' என்று அவன் என்னைக் கேட்கிறான். ஒரு நாள் நான் வண்டியில் பலராம் வீட்டுக்குச் சென்றுகொண்டிருந்தபோது, வழியில் ஹாஸ்ரா சொல்வதை நினைத்து மிகவும் வேதனைப்பட்டேன். அப்போது நான் ஜகன்மாதாவிடம், "அம்மா! நரேந்திரன் முதலிய இளைஞர்களைப் பற்றி நான் ஏன் இந்த அளவுக்குக் கவலைப்பட வேண்டும் என்று ஹாஸ்ரா என்னைக் கேட்கிறான். பகவானைப்பற்றிச் சிந்திப்பதை விட்டு ஏன் இந்தப் பையன்களைப்பற்றி எல்லாம் நினைத்துக்கொண்டிருக்கிறாய் என்று அவன் என்னைக் கேட்கிறான்" என்று சொல்லி முறையிட்டுக்கொண்டேன்.

இவ்விதம் நான் ஜகன்மாதாவிடம் சொல்லி முறையிட்டேனோ இல்லையோ, மறு விநாடியே ஜகன்மாதா ஒரே வீச்சில் தானே மனித வடிவத்தில் இருந்துகொண்டிருப்பதை (மனிதனாக ஆகியிருப்பதை) எனக்குக் காட்டியருளினாள். சுத்தமான பாத்திரத்தில் பிரகாசம் தெளிவாக இருக்கும். அதுபோல் பரிசுத்தமான ஆத்மாவில் அவன் தன்னை மிகவும் தெளிவாக வெளிப்படுத்துகிறான். மனிதனாகத் தேவி ஆகியிருக்கும் அந்தக் காட்சியைப் பெற்ற பிறகு, என் சமாதிநிலை சிறிது கலைந்ததும், ஹாஸ்ராவின்மீது எனக்குக் கோபம் ஏற்பட்டது. 'என் மனதை இந்தத் துஷ்டன் வேதனைப்படும்படி செய்தானே!' என்று எனக்கு நானே சொல்லிக்கொண்டேன். ஆனால் மறுகணமே, 'அந்த அப்பாவிப் பயலைக் குற்றம் சொல்லி என்ன பயன்? அவனுக்கு எப்படி உண்மை தெரிய முடியும்?' என்று நினைத்துக்கொண்டேன். ★

---

## செய்திகள்

★ ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் ஆகியவற்றின் பொதுத்தலைவர். ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்கள் தென்னாட்டிற்கு விஜயம் செய்கிறார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம். அவர் சென்னை ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் செப்டம்பர் 16 ஆம் தேதி முதல் 23 ஆம் தேதி வரை தங்கியிருப்பார்.

★ கடலூரில் உள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண பக்தர்களின் வேண்டுகோளுக்கிணங்கி, சங்கர பக்த ஜன சபா நிலையத்தில் ஜூன் 8—ஆம் நாள் ஞாயிறன்று ஸ்ரீமத் சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீமத் சுவாமி ராகவேசானந்தர், ஆகியோரால் ஒரு நாள் அந்தர்யோகம் நடத்தப் பெற்றது. அதைத் தொடர்ந்து அன்றிரவு ஏழு மணிக்கு பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் வாழ்க்கை வரலாற்றை விளக்கும் திரைப்படம் ஸ்ரீமத் சுவாமி சர்வக்ஞானந்தரின் உரையாடலுடன் இடம் பெற்றது.

"விவேகானந்தரின் அறிவுரைகள்" என்ற நூல் இப்போது மலிவுப் பதிப்பாக வெளிவந்துள்ளது. அந்நூல் அச்சாகி முடியும் தருவாயில் அதற்குப் பின்வரும் அன்பர்கள் பொருளுதவி புரிந்தனர்.

| | | |
|---|---|---|
| 1. | திரு என். கிரிதாரி பிரஸாத், கோவை | ரூ. 250—00 |
| 2. | திரு கே. ஆர். ராதாகிருஷ்ணன், கோவை | ரூ. 250—00 |
| 3. | டாக்டர் எம். கிருஷ்ணன், உதகமண்டலம் | ரூ. 250—00 |
| 4. | திரு குன்னா கவுண்டர், உதகமண்டலம் | ரூ. 250—00 |




## காசியும் ஸ்ரீராமகிருஷ்ணரும்

மதுரநாதர் 1868—ஆம் ஆண்டு காசி, பிரயாகை, பிருந்தாவனம் முதலிய புண்ணிய ஸ்தலங்களுக்கு யாத்திரை செல்வதற்கு உரிய ஏற்பாடுகளைச் செய்தார். அந்த யாத்திரையில் தங்களுடன் வருமாறு மதுரநாதரும் அவரது மனைவி ஜகதம்பாதாசியும் பரமஹம்சரை மிகவும் வேண்டிக் கேட்டுக்கொண்டார்கள். குருதேவரும் அவர்களின் மனமார்ந்த கோரிக்கைக்குச் சம்மதம் தெரிவித்தார்.

1868 ஜனவரி 27-ஆம் நாள் குருதேவர் உட்பட, தமது உறவினர்கள், நண்பர்கள், வேலைக்காரர்கள் அடங்கிய நூற்றிருபத்தைந்து பேர்களுடன் ஒரு தனி ரெயிலில் மதுரநாதர் கல்கத்தாவிலிருந்து காசிக்கு யாத்திரை கிளம்பினார். அந்த வண்டியைத் தாம் விரும்பும் இடத்தில் நிறுத்துவதற்கும் வேண்டும்போது புறப்படுவதற்கும் அவர் ஏற்பாடு செய்திருந்தார். விசேஷ அனுமதியின் பேரில் மதுரநாதர் தமது யாத்திரையின் பொருட்டு அந்தத் தனி ரெயிலை விட ஏற்பாடு செய்திருந்தார்.

வழியில் மதுரநாதரின் அந்த யாத்திரிகர் கூட்டத்தினர் தேவகர் என்ற இடத்தில் தங்கினர். அங்குள்ள வைத்தியநாதர் கோவிலைத் தரிசித்துவிட்டு அவர்கள் காசியை அடைந்தனர்.

*    *    *

சிவபெருமானின் ஒப்பற்ற தலைநகரம் என்று சொல்லத் தக்க வகையில் தெய்விகம் நிறைந்த இடம் காசி க்ஷேத்திரம். சிவபெருமான், ''நான் இந்தக் காசி க்ஷேத்திரத்தை எனது இருப்பிடமாகக் கொண்டிருக்கிறேன். இந்த க்ஷேத்திரத்தை விட்டு ஒருநாளும் நான் அகலமாட்டேன்'' என்று சத்தியப்பிரமாணம் செய்து தந்திருப்பதாகவும், அது காரணமாகவே காசிக்கு 'அவிமுக்த க்ஷேத்திரம்' என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது என்றும் லிங்கபுராணம் கூறுகிறது. ''காசி க்ஷேத்திரம் இந்தப் பூமியில் இருந்தாலும், உண்மையில் அது இந்தப் பூமியுடன் சம்பந்தப்படாமல்தான் இருக்கிறது'' என்று காசியின் மகத்துவத்தைக் கூறும் காசிகண்டம் குறிப்பிடுகிறது.

''காசி நகரம் பூமியில் இருப்பதாகத் தோன்றியபோதிலும் உண்மையில் அது பூமியில் இல்லை. அந்தரிக்ஷத்தில் அது பரமேசுவரனின் திரிசூலத்தின் நுனியில் இருக்கிறது.

''காசிநகரம் கீழே இருப்பதாகத் தோன்றிய போதிலும் பிரளயகாலத்தில் விச்வநாதர் தமது திரிசூலத்தின் நுனியில் இதைத் தாங்கிக் கொள்வதனல் சொர்க்கலோகத்திற்கும் மேலே இருக்கிறது.

''பிரளயகாலத்தில்கூட அழியாத இந்த நகரத்தை விட்டுச் செல்லாமல் பார்வதியும் பரமேசுவரனும் இங்கு விஹாரம் செய்கிருர்கள். (வாசம் செய்கிருர்கள், சஞ்சரிக்கிருர்கள்.) அதனல் இந்த க்ஷேத்திரத்திற்கு அவிமுக்தம் என்று பெயர்'' என்றெல்லாம் காசிகண்டம் கூறுவதை அடிப்படையாகக் கொண்டு, ''பி ளய காலத்திலுங்கூட அழியாத ஒரே இடம் காசி க்ஷேத்திரம்தான்'' என்று பௌராணிக ரீதியில் சொல்கிருர்கள்.

புராணக் கதைகள் எப்படி இருப்பினும், காசி, ஹிந்து மதத்தின் இதயமாக, சரித்திரம் புக இயலாத காலம் முதற்கொண்டு இன்று வரையும் விளங்கி வருகிறது என்பதில் எவருக்கும் கருத்து வேற்றுமை இருக்க இயலாது. ஹிந்துக்களின் புண்ணிய க்ஷேத்திரங்கள் என்ற பட்டியலில் முதலில் காசியைச் சொல்லிவிட்டுப் பிறகுதான் மற்ற க்ஷேத்திரங்களைச் சொல்வார்கள்; சொல்லவும் முடியும்.

* * *

ஸ்ரீராமகிருஷ்ணர் ஒரு படகுமூலம் கங்கையைக் கடந்து முதல் முறையாகக் காசிக்குச் சென்றுகொண்டிருந்தார்.* தூரத்தில் காசி க்ஷேத்திரம் அவரது கண்ணுக்குத் தட்டுப்பட்டது. அப்போது அந்த க்ஷேத்திரம் சாஸ்திரங்களில் கூறப்பட்டிருப்பதைப் போன்று, உண்மையாகவே பொன்மயமாகப் பிரகாசிப்பதை ஞானக்காட்சியில் அவர் கண்டார். காசிபுரி முழுவதும் பொன்னாலான நகரமாக, ஸ்வர்ண வார்ப்படம் போன்று ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிப்பதாக அவருக்குத் தோன்றியது. (காசி என்ற சம்ஸ்கிருதச் சொல்லுக்கே 'பிரகாசம்' என்பதுதான் பொருள்.)

அதாவது, காசி க்ஷேத்திரம் முழுவதையும் சூழ்ந்திருக்கும் தெய்விகத்தன்மையைத்தான் அவர் அவ்விதம் ஞானக்காட்சியில் கண்டார். சரித்திரத்தின் காலக் கணக்கிற்குள் வராத எவ்வளவோ காலத்திற்கு முன்பிருந்து, எத்தனை எத்தனையோ மகான்களும் பக்தர்களும் அங்கு யாத்திரையாகச் சென்று வருகிறார்கள்; அங்கேயே வாழ்ந்தும் இருக்கிறார்கள். அவர்களின் ஞானமும் பக்தியும் மிகுந்த தூய உள்ளங்களிலிருந்து எழுந்த தெய்விகச் சிந்தனைகள் அங்கே ஒன்றுதிரண்டு உறைந்து அந்த க்ஷேத்திரத்தைத் தேவர்கள் வாழும் நகரம் போன்று ஆத்மப்பிரகாசப் பொருந்தியதாகச் செய்திருப்பதையும் அவர் கண்டார். அவ்விதம் உண்மையான காசி என்பது அங்கு ஞானமயமாக, சூட்சுமமாக இருப்பதும், அதன் நிழல் என்று சொல்லத் தக்க வகையில்தான் ஸ்தூலக் கண்ணுக்கும் மனதிற்கும் அனைவருக்கும் புலப்படும் ஜடமயமான காசி இருப்பதும் அவருக்குப் புலப்பட்டன.

இவ்விதம் அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தை முதல் முறையாகப் பார்த்தபோதே அவர் பெற்ற ஞானக்காட்சி, காசி க்ஷேத்திரத்தின் தெய்விகத் தன்மை பற்றி அவரது உள்ளத்தில் ஆழ்ந்து பதியும்படி செய்தது. சச்சிதானந்தமாகிய அகண்ட பரப்பிரம்மத்தின் ஸ்தூல வடிவம் என்றே மதிக்கத் தகுந்த காசி க்ஷேத்திரத்தின் புனிதத்தன்மையையும் மகத்துவத்தையும் அவர் நன்கு உணர்ந்தார். ஆகவே அந்தப் புனிதக் காசி மண்ணில் காலைக்கடன்களை

* காசியில் இரண்டு ரெயில்வே ஸ்டேஷன்கள் இருக்கின்றன. அவற்றுள் வாராணசி என்ற ஸ்டேஷன் பெரியதும் ஜங்ஷனும் ஆகும். இங்கிருந்தே இந்தியாவின் பல பாகங்களுக்கும் வண்டிகள் புறப்படுகின்றன. இது தவிர, 'காசி' என்ற சிறிய ரெயில்வே ஸ்டேஷன் ஒன்றும், வாராணசி ரெயில் நிலையத்திலிருந்து சுமார் இரண்டு மைலில், வருணா சங்கமம். பாலம் ஆகியவற்றுடன் கூடிய கங்கைக் கரையில் அமைந்திருக்கிறது. கல்கத்தாவிலிருந்து வரும் ரெயில், காசி ரெயில்வே ஸ்டேஷனைக் கடந்து வாராணசி ஜங்ஷனை அடைகிறது. ஸ்ரீராமகிருஷ்ணர் காசி ரெயில் நிலையத்தில் இறங்கிப் படகுமூலம் கேதாரகட்டத்தை அடைந்திருக்கிறார் என்று ஊகிக்க வேண்டியிருக்கிறது. 'முதல் முறையாக அவர் காசியைப் பார்த்தபோது' என்பது, காசி ரெயில் நிலையத்திலிருந்து கேதார்கட்டத்திற்குப் படகில் செல்வதற்கு முற்றிலும் பொருந்துவதாக இருக்கிறது.

வாராணசி ரெயில் நிலையம் கங்கையிலிருந்தும் தூரத்தில் இருக்கிறது; கேதார் கட்டத்திலிருந்தும் தூரத்தில் இருக்கிறது. அங்கிருந்து செல்வதானால் வேறு வாகனங்களைப் பயன்படுத்தி இருக்க முடியுமே தவிர, படகுமூலம் சென்றிருக்க முடியாது. எனவே, அவர் வாராணசி ரெயில் நிலையத்தில் இறங்கியிருக்க மாட்டார்; காசி ரெயில் நிலையத்தில் இறங்கிப் படகில் கேதாரகட்டத்தை அடைந்திருக்கக்கூடும் என்று தோன்றுகிறது. ஆனால் இது வெறும் ஊகம் மட்டுமே.

முடித்து அசுத்தப்படுத்த அவர் மனம் இடம் தரவில்லை. எனவே மதுரநாதர் ஒரு பல்லக்குக்கு ஏற்பாடு செய்தார். அந்தப் பல்லக்கில் ஸ்ரீராமகிருஷ்ணர் காசியின் எல்லையாகிய அஸி என்ற நதியைக் கடந்து சென்று அதாவது காசி க்ஷேத்திரத்தின் எல்லைக்கு வெளியே சென்று மலஜலம் கழித்துவிட்டு இருப்பிடம் திரும்பினர். இவ்விதம் காசியின் ஆத்மப்பிரகாசத்தைப் பொன்னுலான நகரமாக ஞானக்காட்சியில் கண்டதனுல், ஆரம்பத்தில் சில நாட்கள் அந்த க்ஷேத்திரத்தின் புனிதத்தன்மையைப் பாதுகாப்பதில் மிகவும் கருத்துடன் இருந்தார். பிறகு அந்த மனநிலை மாறியதும், காலைக்கடன்களை முடித்து வருவதற்கு என்று காசியின் எல்லைக்கு வெளியே செல்ல வேண்டிய அவசியம் அவருக்கு நேரவில்லை.

[காசி சிவபெருமானின் திருமேனி போன்றது. 'காசித் திருத்தலம் முழுவதுமே ஸ்ரீபரமேச்வரனின் அருளால் சூழப்பட்டுள்ளதால், அங்குள்ள ஒவ்வொரு கல்லும் ஸ்ரீவிச்வநாத லிங்கமாகக் கருதப்பட வேண்டும்' என்று சொல்லப்படுவதுண்டு.

ஸ்ரீ ஆதிசங்கரர் முதன்முதலில் காசிக்குச் சென்றபோது, அந்த நகரம் பார்க்குமிடமெங்கும் நீக்கமறச் சிவலிங்கங்கள் மயமாகவே அவருக்குத் தென்பட்டதாகவும், சிவலிங்கங்கள் மீது கால் வைத்து எப்படி நடந்து செல்வது என்று அந்த க்ஷேத்திரத்தில் நுழைவதற்கே முதலில் தயங்கினுர் என்றும் ஒரு செவிவழிச் செய்தி கூறுகிறது.

காசியில் வாழ்ந்த துளசிதாசர், அந்தத் திருத்தலத்திற்குள் காலைக்கடன்களைக் கழிக்க விரும்பாமல், தினமும் விடியற்காலையில் கங்கையின் மறுகரைக்குச் சென்று காலைக் கடன்களை முடித்துத் திரும்புவார் என்பது பண்டைய வரலாறு.

ஸ்ரீராமகிருஷ்ணர் காசியில் நுழைந்தபோது கொண்ட கருத்து ஒரு வகையில் சங்கரரின் கருத்தைப் போன்று இருக்கிறது. காலைக் கடன்களைக் கழிப்பதற்கு அவர் அஸி எல்லையைக் கடந்து சென்ருர் என்பது அதே போன்ற துளசிதாசரின் செயலை நினைவுபடுத்துகிறது. அவர்களின் அந்தச் செய்கை, பாமர மக்களும் காசியின் புனிதத்தன்மையை உணர்ந்துகொள்ளும் வகையில் அமைந்திருக்கிறது.]

மதுரநாதர் கேதார கட்டத்தில் மாளிகைகள் என்ற சொல்லத்தக்க இரண்டு பெரிய வீடுகளில் தமது யாத்திரைக் கோஷ்டியினருடன் தங்கினர்.

மதுரநாதர் காசியில் தங்கியிருந்த காலம் முழுவதும் ஓர் அரசருக்கு உரிய படாடோபங்களுடன் வாழ்ந்தார். அவர் கேதார கட்டத்தில் தாம் தங்கியிருந்த மாளிகையை விட்டு வெளியே வரும்போதெல்லாம், அவருக்குப் பணியாட்கள் வெள்ளிக்குடையைப் பிடித்துச் செல்வார்கள்; அவருக்கு முன்னும் பின்னும் பிரத்தியேக உடையணிந்த சிப்பந்திகள் (பாண்டு வாத்தியம் வாசிப்பவர்களைப் போன்று சீருடை அணிந்த சேவகர்கள்) வரிசை வரிசையாக அணிவகுத்துச் சென்றனர். ஸ்ரீராமகிருஷ்ணரால் அவ்விதம் நடக்க இயலாது என்பதனுலும், அவரை நடக்கும்படி செய்து அழைத்துப் போக மதுரநாதர் விரும்பாததனுலும் குருதேவருக்காக அவர் ஒரு பல்லக்கை ஏற்பாடு செய்திருந்தார். அந்தப் பல்லக்கில் குருதேவர் தாம் விரும்பும் இடங்களுக்கு ஹ்ருதயுடன் சென்று வந்தார்.

காசியில் தங்கியிருந்தபோது ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் குறிப்பிடத் தக்க சில அனுபவங்களும் ஏற்பட்டன.

(தொடரும்)



# நடராஜ தத்துவம்

பிரம்மசாரி முத்துக்குமார்

கடவுளின் வடிவங்களுக்குள்ளும் சிவ பெருமானின் திருவுருவங்களுக்குள்ளும் நடராஜ வடிவம் தத்துவரீதியிலும் கலைநுணுக்கத்திலும் தலையாய முக்கியத்துவம் பெறுகிறது. இந்தத் திருவுருவம் மிகவும் ஆழ்ந்த கருத்துக்களை உணர்த்துவதாக அறிஞர்கள் குறிப்பிடு கிறார்கள். நடராஜ வடிவத்தைப் போன்ற கலையம்சமும் தத்துவ உண்மையும் கொண்ட வடிவத்தை இனிமேல் வேறு எந்தக் கலைஞனாலும் உருவாக்க முடியாது என்று அறிஞர் கருதும் அளவுக்குத் தாண்டவ வேந்தரது வடிவம் பெருமை பெற்றிருக்கிறது.

தெய்வ வடிவங்கள் பலவற்றுள் நடராஜ வடிவம்தான் இந்தியர்களை மட்டுமின்றி வெளிநாட்டவர்களையும் கலைரசிகர்களையும் ஓவியர்களையும் தத்துவமேதைகளையும் ஒருங்கே கவரும் உருவமாகும். இந்திய ஞானிகள் பரம்பொருள் தத்துவத்தைக் குறித்துக் கண்ட அரிய தெய்வ தர்சனங்கள் பலவற்றுள் அதி உன்னதமானது நடராஜ வடிவமே என்று தத்துவமேதைகள் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் அணுவிலிருந்து அண்டம் வரையிலும் ஒரு விதியின் கட்டுப் பாட்டில் இயங்கிக்கொண்டிருக்கிறது. இது வெறும் ஜடசக்தியாக மட்டுமே இருக்குமானால் இத்தனை ஒழுங்குப்பாட்டுடன் இந்தப் பிரபஞ்சத் தின் இயக்கம் இயங்க முடியாது. ஒரு பேரறி வான மகாமதியை மையமாகக் கொண்டுதான் இந்த இயக்கங்களெல்லாம் இயங்க முடியும்; இயங்கிக்கொண்டிருக்கின்றன என்பது சமய சித்தாந்த முடிவு.

ஒழுங்குமுறை தவறாமல் இயங்கி வரும் பிரபஞ்ச இயக்கங்களுக்கெல்லாம் எந்தப் பேரறிவு மூலகாரணமாக, சூட்சுமமாக இருந்து கொண்டிருக்கிறதோ அந்த ஆனந்தமயமான (சத்-சித்-ஆனந்தம்) மகாமதியின் ஸ்தூல அடையாளச் சின்னமே நடராஜ வடிவம். இறைவனின் பிரபஞ்ச நடனத்தின் (Cosmic Dance) வெளியீடாகவே இந்த உலகின் இயக்கம் முழுவதும் விளங்குகிறது.

'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்பது ஆன்றோர் கண்ட ஒப்பற்ற உண்மை யாகும். பஞ்ச கிருத்தியங்களின் தலைவர்கள் பரமபதியாகிய இறைவனுடைய அருட்சக்தி யினாலேயே ஐந்தொழிலும் நிறைவேற்று வார்கள். அவன் இயங்காவிட்டால் ஐந்தொழில் களும் நடைபெறமாட்டா.

இறைவன் எல்லா உயிர்களுக்கும் உயிராக விளங்குகிறான். ஆதலால் அவன் மீது விழுந்த அடி எல்லா உயிர்களின் மீதும் பட்டது. சிவபிரான் ஸனகர் முதலிய முனீந்திரர் நால் வருக்கும் ஞானபாதத்தை உபதேசித்துக் கொண்டிருந்தார். அப்போது ஒருகண நேரத் திற்கு அவர் யோகநிலையில் இருக்க, விண்ணுல கத்துத் தேவரும் மண்ணகத்து மானிடரும் காமப்பற்றின்றி இருந்தனர்; உமாதேவியார் இறைவனின் கண்களை மூட, எல்லா உலகங் களிலும் இருள் சூழ்ந்துகொண்டது. இது போன்ற பல கதைகளின் மூலம் புராணங்கள் 'இறைவனே எல்லாச் செயல்களுக்கும் கர்த்தாவாக விளங்குகிறார்' என்பதை உணர்த் துகின்றன.

நடராஜர் சிதம்பரத்தில் (சித் - அம்பரம்) ஆனந்த நடனம் ஆடுகிறார். 'சித்' என்றால் அறிவு, ஞானம் என்று பொருள்படும். சித்-ஆகாசம் அல்லது ஞானவெளி. எந்த இதயங்களிலெல்லாம் அறியாமை என்ற அஞ்ஞான இருள் அகன்று ஞான ஒளி பிரகாசிக் கிறதோ அந்தச் சிதாகாசங்களிலெல்லாம் நடராஜர் ஆனந்த தாண்டவம் புரிகிறார். இதயக் கமலத்திலே சிதாகாச வடிவமாகிய

பரவெளி அமைந்திருக்கிறது. இதுவே அனைத்திற்கும் ஆதாரம்.

''இனி, இந்தப் பிரம்மபுரத்தில் (உடலில்) தாமரை போன்ற சின்னஞ்சிறு மாளிகை உண்டு. அதனுள் சிற்றம்பலம் அமைந்திருக்கிறது. அதில் உள்ளது எதுவோ அதைத் தேட வேண்டும், ஆராய்ந்து அறிந்துகொள்ள வேண்டும். இந்த ஆகாசம் எவ்வளவு பெரியதோ அவ்வளவு பெரியது இருதயத்திலுள்ள ஆகாசமாகும். வானுலகும் மண்ணுலகும் இதனுள் அடங்கும். அக்கினியும் வாயுவும், சூரியனும் சந்திரனும், மின்னலும் நட்சத்திரங்களும், இன்னும் இங்கு எது எது இவனுக்கு உண்டோ எது எது இல்லையோ அது எல்லாம் இதனுள் அடங்கும்'' என்று சாந்தோக்ய உபநிஷதம் குறிப்பிடும் ஆகாசமே சிதாகாசம் எனப்படும் சிதம்பரமாகும். பூதாகாசம், சித்தாகாசம் ஆகிய ஆகாசங்களுக்கெல்லாம் ஆதாரமாக இருக்கும் சிதாகாசமே நடராஜர் ஆனந்த தாண்டவம் செய்யும் ஞானவெளியாகத் திகழ்கிறது. பிரபஞ்ச இயக்கங்களுக்கு வேண்டிய சக்தியின் ஊற்று அந்தச் சிதாகாசத்திலிருந்தே துவங்குகிறது.

நடராஜ வடிவம் பற்றி, திரு ஆனந்த குமாரசுவாமி பின்வருமாறு குறிப்பிடுகிறார்:-

நடராஜ வடிவத்தின் முக்கியத்துவத்தை மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்: 1. அண்ட கோடிகளின் ஒழுங்குப்பாடான இயக்கத்திற்குத் (Rhythmic activity) தாளத்தோடு கூடிய நடராஜரின் நடனமே மூல ஊற்றாகத் திகழ்கிறது. 2. மாயை வலையில் அகப்பட்ட எண்ணற்ற ஜீவர்களை இறைவன் விடுவிக்கிறான். 3. நடனமிடும் இடம் சிதம்பரம் என்பது இதயத்திலுள்ள பிரபஞ்சத்தின் மையத்தை உணர்த்துகிறது.

விஞ்ஞானம், சமயம், கலை ஆகிய மூன்று துறைகளும் ஒன்றாக இணைந்த திருவுருவம் நடராஜ வடிவம்.

படைப்புக் கடவுளாகிய பிரம்மாவின் இரவில் இயற்கை முழுவதும் உறங்குகிறது. மீண்டும் சிவபெருமானின் சங்கல்பம் இல்லாமல் இயற்கை இயங்கிச் செயற்பட முடியாது. அவருடைய சுய பேரானந்த நிலையிலிருந்து அவர் எழுந்து நடனமிடத் துவங்குகிறார். அந்த நடனத்தின் மூலம் ஒடுங்கியிருக்கும் பிரபஞ்சத்தில் எழுச்சி அலைகள் ஓங்கார ஒலியின் மூலம் ஊடுருவிப் பாய்கின்றன. பிரபஞ்சம் முழுவதும் விழித்தெழுகிறது. பிரபஞ்ச ஆகாசத்தில் இயற்கைப் பொருள்களும் அண்டங்களும் உயிர்களும் நடராஜரை மையமாகக் கொண்டு அவரை வளையவந்து நடமாடுகின்றன. காலச் சக்கரம் முடிவு பெற்றவுடன், எல்லாம் மீண்டும் அவரிடம் ஒடுங்குகின்றன. அப்போது பிரபஞ்சத்துக்கெல்லாம் அவர் ஓய்வு கொடுக்கிறார்.



நடராஜ வடிவம்

தெய்விக ஆனந்தம், தெய்விக இயக்கம், ஆன்ம முக்தி ஆகிய மூன்றின் அறிகுறியாகவும் நடராஜ வடிவம் திகழ்கிறது.

பெருமானின் தூக்கிய பாதம் உலகுயிர்களுக்கெல்லாம் அருள் பாலிப்பதைக் குறிக்கிறது. முயலகன் என்ற அரக்கன் மீது அவர் காலை ஊன்றியுள்ளார். அது அறியாமை, சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும் முக்குணங்கள், ஆணவம் ஆகியவற்றை அழிப்பதையும் இறைவனின் மறைத்தல் தொழிலையும் உணர்த்துகிறது.

கொடியதிலும் கொடியது அகங்காரம். புலியைப் போன்று அது பொல்லாதது. அகங்கார மமகாரங்களை அறவே அழித்தாலன்றி ஆத்மஞானம் பெற முடியாது. அகங்காரம் என்னும் கொடும்புலியைப் பெருமான் கொன்று, அதன் தோலை ஆடையாக உடுத்தியுள்ளார். அகங்காரம் அறவே அழிக்கப்பட வேண்டும் என்பதை இறைவனின் புலித்தோலாடை நமக்கு விளக்குகிறது.

நடராஜர் ஒரு கையில் தீயை ஏந்தியுள்ளார். தீ ஞானத்தின் சின்னமாக விளங்குகிறது. சடைமுடி ஞானத்திற்கு அடையாளம். 'நுண் சிகை ஞானமாம்' என்பது திருமந்திரம். பிரபஞ்சம் தோன்றுவதற்கும், நிலைபெற்றிருப்பதற்கும், ஒடுங்குவதற்கும் ஓம் என்ற பிரணவ மந்திரம் ஆதாரமாக இருக்கிறது. ஆதி ஆதார ஒலியாகிய அந்த ஓங்கார ஒலியின் அடையாளமாக இறைவன் ஏந்தியுள்ள உடுக்கை விளங்குகிறது. 'ஓசை ஒலி அனைத்துமாய் ஆனவன் இறைவனே' என்பது இதன் விளக்கம். உலகசிருஷ்டியின் அடையாளமாகத் திகழ்வது உடுக்கை. சந்திரன் ஆன்மாவின் பேரானந்தப் பெருநிலையின் அறிகுறி. ஞானத்தின் விளக்கமாகக் கங்கை திகழ்கிறது.

நடராஜரின் இந்தப் பிரபஞ்ச நடனத்தில் பஞ்சபூதங்களும் இடம் பெற்றிருப்பது, அவை அவரிடமிருந்தே தோற்றத்திற்கு வருகின்றன என்பதைக் குறிக்கிறது. ஐந்தொழிலுக்கும் அதிபதி நடராஜரே என்பதை, சுவாமி விபுலானந்தர் தமது நடராஜ வடிவம் என்ற நூலில் பின்வருமாறு குறிப்பிடுகிறார்:-

''பிரமன் படைத்தல் தொழிலை மட்டும் கொண்டிருக்கிறார். விஷ்ணு படைத்தலுக்கும் காத்தலுக்கும் உரியவர். ருத்திரர் முத்தொழிலுக்கும் உரியவர். மகேசுவரன் நான்கு தொழிலுக்கும் உரியவர். சதாசிவர் ஐந்தொழிலுக்கு உரியவர். ஐந்தொழில்களையும் தன்னுள் அடக்கி அவற்றுக்கும் அப்பாலாகவும் நிற்பது முதல்வனது உண்மை வடிவம். ஆதலால் பிரம்ம விஷ்ணுக்களால் அடிமுடி தேடிக் காண இயலாத முழுமுதற் கடவுளின் திருமேனியைக் குறிப்பிடும் உருவம், பஞ்சகிருத்தியங்களையும் காட்டி அவற்றிற்கும் அப்பாலாகவும் நிற்க வேண்டும். சிற்சபையில் நடனம் புரியும் ஆனந்த நடராஜனது திருவுருவம் ஐந்தொழில்களையும் காட்டுவதோடு ஞானமாகிய சிதாகாசத்தின் இயல்பையும் அறிவுறுத்துகிறது. எனவே நடராஜமூர்த்தம் ஏனைய மூர்த்தங்களைவிடச் சிறப்புடையதாயிற்று.''

சிவபெருமானின் திருநடனங்கள் பல என்றும், அவற்றுள் ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து செயல்களும் அடங்கும் என்றும் சைவசித்தாந்தம் கூறுகிறது. அந்த நடனங்களுள் ஏழு வகையான நடனங்கள் முக்கிய இடத்தைப் பெற்றிருக்கின்றன. அவையாவன-1. படைத்தல் தாண்டவம், 2. காத்தல் தாண்டவம், 3. மறைத்தல் தாண்டவம், 4. அருளல் தாண்டவம், 5. சங்காரத் தாண்டவம், 6. திரிபுரத் தாண்டவம், 7. ஆனந்த தாண்டவம்.

படைத்தல் தாண்டவம்

தாண்டவப் பெருமானின் வலக் கையில் என்ன பொருள் இருக்கிறதோ அதைக் கொண்டுதான் அந்த நடனம் எந்தத் தொழிலைக் குறிக்கிறது என்பது விளக்கப்படுகிறது.

இந்தத் தாண்டவத்தில் இறைவனின் வலக் கையில் உடுக்கை உள்ளது. ஒலிகளுக்கெல்லாம் ஆதாரமும் மூலமுமான பிரணவ ஒலி இங்கிருந்து தோன்றுகிறது. மாறி மாறி வரும் பிரபஞ்சம் இந்தப் பிரணவ ஒலியிலிருந்து வெளிப்படுகிறது. இந்தத் தாண்டவம் படைத்தல் தொழிலைக் குறிக்கிறது. 'தோற்றம் துடியதனில்' என்பது திருமந்திர வாக்கு. எனவே முக்குண வசப்பட்டு, மும்மலங்களால் மறைக்கப்பட்டுத் துன்பம் அனுபவிக்கும் ஆன்மாக்களின் முக்தியின் பொருட்டுப் பதியானவர் தனு கரண புவன போகங்களைப் படைக்கிறார் என்ற தத்துவத்தை இந்தத் திருவுருவம் விளக்குகிறது.

காத்தல் தாண்டவம்

இந்த நடனம் காத்தல் என்ற இறைவனின் இரண்டாவது தொழிலைக் குறிக்கிறது. சந்தியா தாண்டவம் என்றும் இது அழைக்கப் படும். பெருமானின் அபயக் கரம் இதில் முக்கிய இடம் பெற்றுள்ளது. ஆன்மாக்கள் ஒருபோதும் எந்தவிதத் துன்பத்திற்கும் பயப்பட வேண்டிய தில்லை என்றும், தமது அருளை வேண்டிப் பிரார்த்திப்பவர்களுக்குத் தாம் அடைக்கலம் தரக் காத்திருப்பதாகவும் சிவனார் இந்தத் தாண்டவத்தின் மூலம் உறுதி தருகிறார். 'அடியேன் ஆக்கி அச்சந்தீர்த் தாட் கொண்டான்' என்பது திருச்சதகம். காத்தல் தொழிலின் மறு பகுதியாகிய நன்மையை உணர்த்துவதற்குப் பெருமானின் கருணைமிகு திருமுகம் தேஜசால் பிரகாசிக்கிறது.

மறைத்தல் தாண்டவம்

இந்த நடனத்தில் கைகளில் துடி, சூலம், தீச்சுடர், பாம்பு, பாசம் ஆகியவை காணப் படுகின்றன. இவற்றுள் பாசக் கயிறு பிரதான இடம் பெற்றுள்ளது. இடக்கை வலக்கை என்னும் இரண்டு கைகளிலும் பாசக் கயிற்றைப் பிடித்துக்கொண்டு அதைத் தலைக்கு மேல் தூக்கியிருப்பதனாலேயே இந்தத் தாண்ட வத்தில் பாசக் கயிறு முக்கிய இடம் வகிக்கிறது. பாசக்கயிறு ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களைக் குறிப்பிடுகிறது. உயிர்களை மேலும் வினை செய்வதில் அழுத்தி, அதன் மூலமாக உயிர்களுக்கு இருவினையொப்பும் மலபரிபாகமும் ஏற்படச் செய்வதற்காக மறைத்தல் செயலை இறைவன் செய்கிறார் என்ற கருத்தை இந்தத் தாண்டவம் உணர்த்துகிறது. இது மறைத்தல் செயலைக் குறிப்பிடும் தாண்டவமாகும்.

அருளல் தாண்டவம்

இந்தத் தாண்டவத்திற்கு ஊர்த்துவ தாண்டவம் என்றம் அனுக்கிரக தாண்டவம் என்றும் வேறு பெயர்கள் உண்டு. குஞ்சித பாதமாகிய தூக்கிய திருவடியும், கஜஹஸ்த மாகிய நீட்டிய கையும் இங்குத் தாண்டவப் பெருமானின் தலைக்குமேலே சென்றிருக்கின்றன என்பதுதான் இந்தத் தாண்டவத்திற்கு உரிய தனிச் சிறப்பாகும்.

மும்மலங்களுடன் இருந்த ஆன்மாவை அவற்றிலிருந்து விடுவித்து, அதனைத் தூய்மை யாக்கியும் ஞானவிழிப்பை ஏற்படுத்தியும் உயர்ந்த பேரின்ப நிலையை அடையச் செய்யும் இறைவனின் செயலை இந்தத் தாண்டவம் விளக்குகிறது.

''சிறு நெறிகள் சேராமே திருவருளே சேரும் வண்ணம்
குறிஒன்றும் இல்லாத கூத்தன் தன் கூத்தை எனக்கு
அறியும் வண்ணம் அருளிய வாறு ஆர் பெறுவார் அச்சோவே''

என்று திருவாசகம் அருளல் தாண்டவத்தின் கருத்தை நன்கு விளக்குகிறது.

ஊன்றிய பாதத்தின் கீழே உள்ள முயலகன் தீயசக்திகளின் உருவமாக இருக்கிறான். மேலே தூக்கிய திருவடி மலம் நீங்கித் தூய்மை பெற்ற ஆன்மாவைக் குறிக்கிறது. ''அரனடி என்றும் அனுக்கிரகம் என்னே!'' என்று திருமந்திரமும், 'முக்தி என்ற மலர்ப்பதத்தே நாடு' என்று உண்மைநெறி விளக்கமும் கூறுகின்றன. இந்தத் தாண்டவம் சிறப்பாக அருளல் என்ற செயலையே உணர்த்துகிறது.

அழித்தல் தாண்டவம்

இந்த வடிவம் காளிகா தாண்டவம் எனவும் பெயர் பெறும். தாண்டவப் பெருமானின் வலது கையில் தீயை ஏந்தியுள்ளான். இங்கே தீ அழிவின் சின்னமாகும். எனவே இந்தத் தாண்டவம் அழித்தல் செயலைச் செய்கிறது. கருணையே வடிவெடுத்த இறைவன் அழித்தல் செயலை ஏன் செய்ய வேண்டும்? மருத்துவர் நோயாளியைக் குணப்படுத்தும்பொருட்டு நோயாளியின் நன்மைக்காகவே அறுவைச் சிகிச்சையைச் செய்கிறார். அதுபோன்று வைத்தியநாதராக விளங்கும் இறைவன் பிறவிப் பிணியால் வருந்தும் ஜீவனுக்கு அழிவு போன்று தோன்றும் செயல்கள் மூலம் பெருநன்மையையே செய்கிறார்.

நீண்ட நெடிய ஜீவயாத்திரையால் களைத்து ஆன்மாவுக்கு இளைப்பாறுதல் கொடுக்கும் பொருட்டே சிவனார் அழித்தல் தொழிலாகிய பெருங்கருணையைச் செய்கிறார் என்று சைவ சமயம் கூறுகிறது.

திரிபுர தாண்டவம்

ஆணவம் கன்மம் மாயை என்ற மும்மலங் களும் ஆன்மாவைப் பிறவிதோறும் தொடர்ந்து வந்துகொண்டிருக்கின்றன. இவற்றை முப் பெரும் நகரங்கள் என்று புராணங்கள் உருவகமாகச் சொல்கின்றன. அந்த மூன்று நகரங்களையும் தமது சிரிப்பினாலேயே சிவபெரு மான் அழித்தார். மும்மலங்களினால் மனிதனிடம் உள்ள தெய்விகம் மறைக்கப்பட்டுள்ளது. அந்த மலங்களை அழித்து, இறைவன் திருவருள் பாலிப்பதையே திரிபுர தாண்டவம் என்ற தத்துவம் சுட்டிக்காட்டுகிறது.

ஆனந்த தாண்டவம்

இதுவரையில் கூறப்பட்ட தாண்டவங்கள் ஐந்தொழில்களையும் தனித்தனியே வெளிப் படுத்துபவையாகும். ஒரே சமயத்தில் எல்லா நடனங்களையும் ஒன்றுசேரக் காண்பது ஆனந்த தாண்டவம் அல்லது நாதாந்த தாண்டவம் எனப்படும். ஆனந்தமயமான பரப்பிரம்மத்தின் இயல்பான, வேறு வெளிக் காரணங்களால் தூண்டப்பெறாத இன்பப் பூரிப்பின் வெளிப்பா டாக இந்த ஆனந்த தாண்டவம் விளங்குகிறது. இதில், துடி ஏந்திய கை ஆக்கச் செயலையும், அபயக் கை காத்தல் செயலையும், ஊன்றிய திருவடி மறைத்தல் செயலையும், தூக்கிய திருவடி அருளல் செயலையும் குறிக்கின்றன.

மேலும், சிவநடனத்தில் ஒன்று ஊனநடனம் என்றும், மற்றொன்று ஞான நடனம் என்றும் இரண்டு வகைப்படும். ஊனத் திருநடனம் உயிர்களின் பிரவிருத்தியையும் (Evolution) ஞானத் திருநடனம் அவற்றின் நிவிருத் தியையும் (Involution) குறிக்கின்றன.

திருமந்திரம் நடராஜரின் நடனத்திற்கு ஆழ்ந்த ஒரு விளக்கம் தருகிறது. அதில் பரந்து விரிந்த ஆகாயம் நடராஜரின் திருமேனி யாகவும், திசைகள் கைகளாகவும் விவரிக்கப் பட்டுள்ளது. இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி ஆகியன மூன்று கண்களாக விளங்கு வதாகக் காமிகாகமம் குறிப்பிடுகிறது. விராட்புருஷனின் நடு நாடியாகிய சுழுமுனை நாடியாக விளங்கும் தில்லையில் எம்பிரான் சதா நர்த்தனம் செய்துகொண்டிருக்கிறான் என்று கோயிற்புராணம் கூறுகிறது. அணுவி லிருந்து அண்டம் வரையுள்ள அசைவுகளுக் கெல்லாம் ஆடலரசனே ஆதாரம் என்பதை உணர்ந்துகொள்வதே மேலான ஞானமும் பிறவிப் பயனும் ஆகும்.

வேதங்கள் ஆட மிகு ஆகமம் ஆடக்
கீதங்கள் ஆடக் கிளரண்டம் ஏழாடப்
பூதங்கள் ஆடப் புவனம் முழுதாட
நாதங்கொண்டாடினான் ஞானானந்தக்கூத்தே
—திருமந்திரம்

★

சாசுவதமான ஆனந்தநிலையை அடைவதற்கும் அதை அடைய வழிகாட்டுவதற்கும் நமக்கு ஒரு குரு மிகவும் அவசியமாகும். குருவினிடம் சிரத்தை காட்ட வேண்டும் என்றால், அவர் வார்த்தைகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்று பொருள். ஸ்ரீசங்கரர் உபதேச பஞ்சகத்தில் எட்டுக் கட்டளைகள் பிறப்பித்திருக்கிறார் :-

1. வேதங்களைக் கற்க வேண்டும். 2. வேதங்களில் கூறியுள்ளபடி நடக்க வேண்டும். 3. சாஸ்திரங்களில் கூறியுள்ளபடி, கடவுளை வழிபட வேண்டும். 4. பலனில் விருப்பத்தை விட்டு விட வேண்டும் 5. பாவச் செயல்கள் செய்வதினின்றும் விலக வேண்டும். 6. சிற்றின்பத்திலுள்ள குற்றங்களை நினைத்துப் பார்க்க வேண்டும். 7. ஆத்ம சிந்தனையில் ஆவலுடனும் உறுதியுடனும் இருக்க வேண்டும். 8. தனது கிருகத்திலிருந்து வெளியேற வேண்டும்.

—ஸ்ரீ சிருங்ககிரி ஜகத்குரு

# ஞானகுரு அவசியமா?

சுவாமி பிரம்மானந்தர்

**நற்காலத்தில்** மதவிஷயமான கிளர்ச்சி ஏறக்குறைய எல்லா இடங்களிலும் காணப் படுகிறது. ஆங்கிலக் கல்வியைப் பெற்றிருக்கும் பெரும் கல்விமான்களும் தங்களது நாத்தி கத்தை விட்டு, ஏதாவது ஒரு மதசம்பந்தமான இயக்கத்தில் சேர்ந்து பங்குகொள்கிறார்கள். ஆன்மிக வாழ்க்கையைப்பற்றி அறிந்துகொள்ள விரும்புபவர்களுக்கிடையிலும் பலவித இயல் புகள் கொண்ட மக்கள் இருப்பதை நாம் பார்க்கிறோம்.

''பொதுவாக வழக்கத்தில் என்ன இருக் கிறதோ அதைப் பின்பற்று; உன் குலகுரு வினிடம் மந்திரதீட்சை பெற்றுக்கொள்; ஜப மாலையை உருட்டி ஜபம் செய்; மதசம்பந்த மான சாதனங்களைப் பழகி வா—இவற்றை யெல்லாம் நீ செய்தாயானால் கடவுளின் தரிசனம் உனக்கு நிச்சயமாகக் கிடைக்கும். எவனும் தன் பரம்பரைக் குருவை (குல குருவை)க் கைவிடக் கூடாது. அவ்விதம் செய்வது மிகப் பெரிய பாவமுமாகும். ஆதலால், குலகுருவின் ஒழுக்கம் எப்படிப்பட்டதாக இருந்தாலும் சரி, அவரிடம்தான் நீ மந்திர உபதேசம் பெறவேண்டும்; அதன் பின்பு உன் சக்திக்கு ஏற்ற வகையில் இயன்றவரை மதக் கிரியைகளைச் செய்து வா'' என்று சிலர் சொல்கிறார்கள். அவ்விதம் சொல்லும் அவர்கள் தாங்கள் சொல்லும் அதே முறைகளைப் பின்பற்றியும் வருகிறார்கள்; சில சமயங்களில் மகாபாரதத்தையோ புராணங்களையோ படிக் கின்றனர், அல்லது படிப்பதைக் கேட்கின்றனர்; அவர்களில் சிலர் தந்திர சாஸ்திரங்களைப் படிப்பதிலும் ஈடுபடுகின்றனர்.

இன்னொரு வகையான சிலர் சாஸ்திரங் களில் சிலவற்றைத் தாங்களாகவே படிக் கிறார்கள். இந்நாளில் கீதை, புராணங்கள், உபநிஷதங்கள், வேதாந்த சூத்திரங்கள், யோகநூல் முதலியன மொழிபெயர்த்து வெளி யிடப்பட்டுள்ளன, இந்தப் புத்தகங்களின் உதவியைக்கொண்டோ, அல்லது ஒரு பண்டி தரின் துணையைக்கொண்டோ, சாஸ்திரங் களின் சாரத்தைத் தெரிந்துகொள்ள இயன்ற வரையில் முயற்சி செய்து வருகிறார்கள். அவர்கள் இந்தச் சாஸ்திரங்களிலிருந்து தமது இயல்புக்கு ஏற்புடைய ஒரு ஞான சாதனத்தைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு, அவ்விதமே பழகி வருகின்றனர். குருவினால் அடையப்படும் பயனை அவர்கள் ஒப்புக்கொள்வதில்லை; ஒப்புக் கொண்டாலும், குருவை அவ்வளவு இன்றி யமையாதவராகக் கருதுவதில்லை. சிலர் அதில் சிரத்தையே கொள்வதில்லை. இவர்களுள் சிலர், ''சித்தகுரு (மெய்ஞ்ஞானம் எய்திய குரு) ஒருவர் உனக்குக் கிடைக்காமற் போனால், அப்படிப்பட்ட ஒருவர் உனக்குக் கிடைத்தாலும் சரி, கிடைக்காமற் போனாலும் சரி, அதை நீ ஒரு பொருட்டாக நினைக்க வேண்டியதில்லை; சித்தகுரு ஒருவரைக் காணும் போது அவரை நமது குருவாக ஏற்றுக்கொள் வோம்'' என்று கூறுகிறார்கள். இவர்களில் சிலர் சன்னியாசிகளோடு பழகுகிறார்கள்; சிலர் எதுவும் செய்வதில்லை.

''கடவுள் எல்லாம் உணர்ந்தவர். நீ அவரிடம் பிரார்த்திப்பாயானால், அவருக்கு, அது கேட்பது நிச்சயம். நீ வேண்டியவற்றையெல்லாம் அவர் உனக்குத் தந்தருள்வார். ஆதலால், புறத்தில் ஒரு குரு இருக்கவேண்டும் என்று என்ன அவசியம்?'' — இது இன்னும் சிலரது கருத் தாகும். இதற்கு எதிரிடையான கருத்துடை யவர்களோ, ''ஒரு குருவின் துணையில்லாமல் ஆன்மிக வாழ்க்கையில் எதையுமே பெற இயலாது. ஆனால், அதற்காக யாரை வேண்டு மானாலும் குருவாக ஏற்றுக்கொண்டு விடக் கூடாது; மெய்ஞ்ஞானம் எய்திய ஒரு குருதான் தேவை'' என்று சொல்கிறார்கள்.

தங்கள் குலகுருவிடம் மந்திர தீட்சை பெற்று, வழக்கத்தில் இருந்து வரும் சம்பிரதாய முறை யின்படி சமயக் கிரியைகளை இயற்றி வருப வர்கள் இருக்கிறார்கள். அவர்களிடம் அவர்களு டைய ஆன்மிக முன்னேற்றத்தைப் பற்றிக் கேட்போமானால், ''நாங்கள் எமது குருவின் சொற்படி அப்படியே நடந்து வருகிறோம். அது தவிர வேறு நாங்கள் ஆன்மிக முன்னேற்றம் அடைந்து வருகிறோமா அடைந்து வரவில்லையா

என்பது போன்ற எதுவும் எங்களுக்குத் தெரியாது'' என்று நிச்சயமாகப் பதில் சொல்வார்கள். ''நீங்கள் மனதில் சாந்தியை அடைந்திருக்கிறீர்களா?.'' என்று வினவினுல், ''இல்லை, நாங்கள் மனதில் சாந்தியைப் பெற்றதுகூட இல்லை'' என்று பதில் கூறுவார்கள். மேலும், அவர்களுக்குக் கடவுளின் மீதுள்ள பக்தி நாளுக்கு நாள் வளர்ந்து வரவில்லை என்பதையும் பார்க்கலாம். பெண் பொன் ஆகிய இரண்டின் மீதும் அவர்களுக்கு உள்ள கவர்ச்சியில் ஓர் இம்மியேனும் கடவுளிடம் அவர்களுக்கு ஏற்படுவதில்லை.



இவ்விதம் ஒன்றுக்கொன்று மாறுபாடான அபிப்பிராயங்கள் பலவற்றைப் பார்க்கும் போது, ஒருவன் முக்தி அடைவதற்கோ ஆன்மிக வாழ்க்கை வாழ்வதற்கோ எந்த விதத்திலேனும் ஒரு குரு அவசியமா என்னும் கேள்வி எழுகிறது. அவசியம் என்ருல், அவர் இன்றியமையாதவர் என்று சொல்லத் தக்க அளவுக்கு அவசியமானவரா? அதாவது, குருவின் துணையின்றி முக்தி பெற இயலாதா? இன்னும், குருவாக இருக்கும் ஒருவர் எத்தகைய தகுதிகளைப் பெற்றவராக இருக்கு வேண்டும்?

இது போன்ற கேள்விகளுக்குத் தக்க பதில்களைப் பெற வேண்டுமாயின், யுக்தியையும் சாஸ்திரங்களையும் மகான்களின் உபதேசங்களையும் ஆதாரமாகக் கொள்ளவேண்டும்.

யுக்தி இது விஷயமாக என்ன சொல்கிறது என்பதை முதலில் ஆராய்வோம். ஒரு சிறிது யோசித்து பார்பவர்களுக்கும் பின்வரும் உண்மை விளங்கும்:— பிரார்த்தனை முதலிய ஆன்மிகச் சாதனைகள் அவரவரது தனி முயற்சிகளைப் பொறுத்தன என்ருலும், ஒருவன் பிறந்தவுடனே நேரே ஒரு தனியிடம் சென்று தியானத்தில் அமர்ந்து அதில் மூழ்கியிருந்தான் என்ற வரலாற்றை உலகம் இதுவரை கண்டதேயில்லை. சாஸ்திரங்களையும் பிற நூல்களையும் படிப்பதனுலும், பக்தி வாய்ந்தவர்களிடமிருந்து பலவித ஆன்மிகச் சொற்பொழிவுகளைக் கேட்பதனுலும் ஒருவன் கடவுளைப்பற்றியும் ஞானத்தைப் பற்றியும் ஏதோ சிறிது தெரிந்துகொள்கிருன் என்பதை மறுக்கும் அளவுக்கு அறிவீனம் எவனிடத்திலும் இராது; இந்த உண்மை பலருக்கும் புரியக்கூடிய ஒன்றே ஆகும்.

ஒரு சாதுவோடு இணங்கியிருப்பதனுலும், ஒரு ஞானியோடு நீண்ட நேரம் கழிப்பதனுலும், உதாரணமாக அமையும் அவரது வாழ்க்கையாலும், ஒருவன் ஆன்மிக வாழ்க்கையில் முன்னேற்றமடைவது உண்மையே; அது போலவே, பிரார்த்தனை செய்வதில் ஒரு சாதுவுக்கு உள்ள மனப்பூர்வமான ஈடுபாட்டையும், அவருடைய நல்ல சிந்தனையினின்று எழும் செயல்களையும் பிற குணங்களையும் காணும்போது, நமக்கும் அந்தக் குணங்களைப் பெறும் ஆசை எழுகிறது என்பதும் உண்மையே. இந்த உண்மைகளை, குரு இன்றியமையாத அளவிற்கு அவசியமா என்று ஐயமுறுவோரும் மறுக்கமாட்டார்கள். ஒருகால் ஒரு குறிப்பிட்ட மனிதருக்கு மரியாதை செலுத்தவும், அவருடைய போதனைகளை என்றென்றும் பின்பற்றி வரவும் அவர்கள் அஞ்சுகிருர்கள் போலும்; அத்தகைய செயல் அறிவுக்கு எவ்விதம் பொருத்தமாக முடியும் என்று அவர்கள் வினவுவார்கள்.

இதற்கு மறுமொழியாக நாம் சொல்வதாவது:— அறிவின் துறைகள் பலவற்றுள் எதை ஒருவன் கற்பதானுலும், ஏதேனும் ஒரு வடிவத்தில் குரு அவசியம் அல்லவா?

வெளியுதவியின்றி எதனையும் ஒருவன் கற்க முடியாது என்பதன்று, ஆனல் அதற்குக் காலம் நீடிக்கும்; இன்னும், மிகுதியான வருத்தமும் தொந்தரவும் அதில் உண்டு. ஒருவன் முதன்முதலில் தன் முன்னேர் கற்றதைத் தானும் கற்க வேண்டும்; பின்பு, இயலுமானல் மேலும் ஏதாவது கற்க வேண்டும்—இதுவே விதிமுறை ஆகும் பிறரிட மிருந்து அறிவைப் பெறுதல் என்ருல், பிறர் கூறுவதை உருப்போடுதல் என்பது பொருள ன்று; தன் முயற்சியினல் அறிவைச் செலுத்திக் கற்பது என்பதுதான் பொருள். இது ஞான குரு விஷயத்திலும் உண்மையாகும். உண்மை யாகவே மகானகத் திகழும் ஒருவரோடு நம்மை ஏதாவது ஒரு பலமான ஞான உறவால் பிணைத்துக்கொள்ள இயலுமானல், அவரது ஆன்மிக உணர்விற்கு விளங்கும் உண்மைகள் நமது வாழ்க்கைகளிலும் எளிதாக இடம் பெற்றுவிடுகின்றன.

இதற்கு மேலும், உண்மையாகவே ஆன்மிக முதிர்ச்சி பெற்றிருக்கும் நிலையிலுள்ள ஒரு ஞானகுருவினிடம் தமது சீடனது ஆன்மிக இயல்பு எத்தகையது என்று அறிந்து கொள்ளும் அரிய திறமை அமைவதுண்டு; ஆதலால் முக்தி அடைவதற்கும் இறைவனைத் தரிசிப்பதற்கும் வேண்டிய மிகவும் எளியவழி யைச் சீடனுக்கு அவர் காட்ட முடியும். இடை விடாமல் தொடர்ந்து அவரோடு பழக இயலு மானல், சாதனம் புரியும்போது கிளம்பும் எல்லாவிதமான இடையூறுகளையும் நீக்கும் வழியை அவனுக்குப் புகட்டியும், அவனது ஆன்மிக முன்னேற்றத்திற்கு ஏற்ற வகையில் வர வர உயர்ந்த ஞானசாதன முறைகளைப் போதித்தும், இவ்விதம் முடிவு வரையிலும் அவனுக்கு அவர் துணைசெய்ய முடியும்.

ஒரு மெய்யான குருவை அடையும் பாக்கியம் பெற்றவர்கள் ஒவ்வொருவரும், மெய்ஞ்ஞானி யான உண்மையான குருவினிடமிருந்து உபதேசம் பெறுவதற்கும் சாதாரண குலகுரு ஒருவரிடமிருந்து உபதேசம் பெறுவதற்கும் பெரும் வேறுபாடு உண்டு என்றே கருது கிருர்கள்.

மெய்யான குரு ஒருவர் மந்திரோபதேசம் செய்யும் சமயத்தில் மந்திரத்தோடு ஒரு தனி வகையான ஞானசக்தியையும் சீடனுக்குத் தந்தருள்கிருர்; சீடனின் ஞான இயல்பிற்குத் தக்கபடி ஒரு மந்திரத்தை அருள்கிருர்; ஆதலால், ஒப்பிட்டுச் சொல்வதானல், அந்தச் சீடன் குறைந்த அளவு முயற்சியாலும் ஆத்ம சாதனத்தாலும் இலட்சியத்தை அடைகிருன்.

மெய்யான குருக்கள் தமது சீடர்களுக்கு இன்னும் ஒரு பேருதவியையும் செய்கிருர்கள். உண்மையாகவே அவர்கள் தமது சீடரின் பொறுப்பைத் தாமே ஏற்றுக்கொள்கிருர்கள். ஒருகால் யாரேனும் ஒரு சீடன் தவருன வழியில் சென்றுவிட்டிருந்தாலும்கூட, அவனைச் சரியான வழிக்குக் கொண்டு வருவதற்காக லௌகிகமாகவும் ஆன்மிகமாகவும் பலவித உபாயங்களையும் கையாளுகின்றனர்.

ஒரு சீடன் தனது குருவின் உபதேசங்கள் அனைத்தையும் முற்றும் உணர்ந்த பின்பு, அதைவிடவும் மிகவும் உயர்ந்த ஒரு நிலையை அடைய விரும்பினல், பழைய குருவினும் மிகவும் முதிர்ந்த ஞானியான வேருெரு குருவிடம் செல்லும் சுதந்திரமும் அவனுக்கு உண்டு; ஆனல் சீடன் உண்மையாகவே முதிர்ந்த அனுபூதியை எய்தியிருந்தாலன்றி, ஆயுள் முழுவதும் ஒரே குருவைப் பின்பற்றுவது தான் சிறந்ததாகும்; அவ்விதம் இல்லாவிட்டால் அவன் தனது ஆன்மிக லட்சியத்தில் உறுதி யோடு நிலைத்திருக்க முடியாது.

குருவின் கட்டளைகளுக்கு இணங்கி நடப்பது சம்பந்தமாகச் சொல்ல வேண்டியது ஒன்று உண்டு—மெய்யான குரு ஒருவர் நீதி தவறி ஒருகாலும் உத்தரவிடமாட்டார்; ஆனல் ஒருவரை மெய்யான குருவாக வரிக்குமுன் அவர் எப்படிப்பட்டவர் என்று நீண்ட காலம் அவரைக் கவனிப்பதும் அவசியம். ஒரு கணத் தில் திடீரென்று தோன்றும் ஓர் எண்ணத்தைக் கொண்டு ஒருவர் கண்டவரெவரையும் குரு வாக அங்கீகரித்தல் கூடாது. மெய்யான குரு ஒருவரைப் பெற விரும்புபவர் அவரோடு சிறிது காலம் வாழ்ந்து, அவர் உண்மையான சாது என்னும் நிச்சய புத்தி உண்டாகும்வரை அவரது ஒழுக்கத்தை ஆராய வேண்டும்.

[அடுத்த இதழில் முடியும்]




# திருடனின் மனமாற்றம்

நரேந்திரன்

இராஜகிருக நகரத்தில் ஒரு புகழ்பெற்ற திருடன் ஒருவன் வசித்து வந்தான். அவன் பெயர் ரௌஹிணேயன். அவனுடைய தகப்பனுரின் பெயரைக் கேட்டாலே மக்கள் ஊரைவிட்டு ஓடிவிடுவார்கள். அத்தகைய பெரிய போக்கிரியான தந்தை, இறந்துபோகும் சமயத்தில் மகனை அருகில் அழைத்து, "அப்பா மகனே! நான் கூறுவதைக் கவனமாகக் கேட்டுக்கொள். நீ உன் தொழிலைத் திறம்படச் செய்து மேன்மை பெற விரும்பினுல் தப்பித்தவறிக்கூடச் சாதுக்களோ சான்றோர்களோ பிரசங்கம் கதை பக்திப் பாடல் ஆகியவற்றை நிகழ்த்து இடங்களுக்கு அருகில்கூடப் போகக்கூடாது. அப்படிப் போனுலும் அவர்கள் கூறுவதைக் காதால் கேட்காதபடி உன் இரண்டு கைகளாலும காதை நன்ருக அடைத்துக்கொண்டு அந்த இடத்தைவிட்டுச் சென்றுவிட வேண்டும்" என்று உபதேசித்துவிட்டு நிம்மதியாக உயிர் துறந்தான்.

தகப்பன் வழியில் சென்ற தனயனும் 'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை' என்றபடி நடந்து வந்தான். ஒருநாள் தற்செயலாக அவன் எங்கோ சென்றுகொண்டிருந்தான். அப்போது அவன் போகும் பாதையில் மக்கள் கூட்டமாக உட்கார்ந்துகொண்டு எதையோ மிகவும் கவனமாகக் கேட்டுக்கொண்டிருந்ததைக் கண்டான். அந்த வழியாகப் போகிறவர்களை அவன் விசாரித்து, சமணப் பெரியார் மகாவிரர் அங்கு மக்களுக்கு உபதேசம் செய்துகொண்டிருந்த விஷயத்தைத் தெரிந்துகொண்டான். அவனுக்கோ அந்த வழியாக அவசியம் போயாக வேண்டும். எனவே தந்தை கூறியதை நினைவில்கொண்டு, சடக்கென்று இரு கைகளாலும் இரு காதுகளையும் பொத்திக்கொண்டு நடக்கத் தொடங்கினுன். ஆனுல் அப்போது திடீரென்று அவன் காலில் முள் தைக்கவே வேறு வழியின்றி ஒரு கையை மட்டும் எடுத்து காலிலிருந்து முள்ளை வெடுக்கென்று பிடுங்கிவிட்டு றுகணமே பழையபடி காதுகளைப் பொத்திக்கொண்டான். இருப்பினும் அதற்ள்ளாக அவன் காதுகளில் மகாவீரரின் உபதேசத்தின் ஒரு சில வார்த்தைகள் ிழுந்து விட்டன.

தேவதைகளின் உடலுக்கு நிழல் கிடையாது. மேலும் அவர்களுடைய கால் மியிலிருந்து நான்கு அங்குல உயரத்தில்தான் நிற்கும், அவர்களின் பாதம் யில் படாது" என்று மகாவீரர் உபதேசித்துக்கொண்டிருந்த விஷயம் அது. துவே அவனுக்கு அதிகம்! எனவே எவ்வளவு வேகமாக அந்த இடத்தை ட்டுச் சென்றுவிட முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக அந்த இடத்தை விட்டு வன் ஓடினுன்.

நாளுக்கு நாள் ரௌஹிணேயனுடைய கொள்ளைத்தனத்தில் அவதிப்பட்ட க்கள் அடிக்கடி மன்னனிடம் புகார் செய்தனர். அது காரணமாக அரசாங்கக் வலர் ரௌஹிணேயனைத் தேடுவதில் மும்முரமாக ஈடுபட்டனர். இதற்கிடையில் வன் ஒரு திருட்டில் மாட்டிக்கொண்டு கையுங் களவுமாகப் பிடிபட்டுவிட்டான் ரசாங்கக் காவலர் அவனை நீண்டகாலமாகத் தேடிக்கொண்டிருந்தார்கள் னுல் அவனைப் பிடித்த பின்புகூட அவன்தான் ரௌஹிணேயனு? என்ற ஐயம்

ஏற்பட்டுவிட்டது. அதைத் தீர்மானிக்க அவர்களால் முடியவில்லை. ஏனெனில் ரௌஹிணேயனின் பெயரை அறிந்தவர்களைக் கணக்கிட்டு எண்ண முடியாது. ஆனால் அவனைப் பார்த்தவர்கள் எவருமே இல்லை. அதனால் காவலர்கள் எத்தனையோ சித்திரவதை செய்துங்கூட ரௌஹிணேயன் தான் யார் என்பதைக் கூறவே இல்லை. வேறு வழியின்றிக் காவலர்கள் அவனுக்கு மயக்க மருந்தை அவன் அறியாதபடி கொடுத்து, அவனை மிகவும் நன்றாக அலங்கரித்த ஒரு நந்த வனத்திற்குக் கொண்டுபோய் ஓர் அழகிய கட்டிலில் படுக்கவைத்துவிட்டு மறைந்து நின்றுகொண்டனர்.

ரௌஹிணேயன் மூர்ச்சை தெளிந்து கண் விழித்தான். நாலா பக்கமும் பார்த்த அவனுக்குத் தூக்கி வாரிப்போட்டது. எங்கே பார்த்தாலும் அழகிய மண்டபங்கள்! மணம் பரப்பும் மலர் நிறைந்த மரஞ்செடிகள்! விலை மதிப்பற்ற ஆடை ஆபரணங்கள் பூண்ட அழகிய பெண்மணிகள் இனிமையான குரலில் பாடிக்கொண்டும், வாத்தியங்களை வாசித்துக்கொண்டும் நடனமாடியபடிச் சென்று கொண்டிருநதனர். அந்தப் பெண்மணிகள் ரௌஹிணேயன் அருகில் வந்து மிகவும் பணிவுடன் வணங்கினார்கள். "சுவாமி! தாங்கள் இந்த சொர்க்கத்திற்கு எழுந்தருளியிருப்பதை நாங்கள் செய்த பூர்வபுண்ணியம் என்றுதான் சொல்ல வேண்டும். தங்களின் வருகையால் சுவர்க்கத்திற்கு இன்னும் புகழ் மிகுந்து விட்டதே! இவ்விதம் சொர்க்கலோகத்தின் சிறப்பைக் கூடும்படிச் செய்த தாங்கள் பூலோகத்தில் எந்தப் பெயருடன் வாழ்ந்தீர்கள் என்பதை நாங்கள் அறியலாமா? தேவலோகத்தில் பொய் சொல்வதோ, கபடம் செய்வதோ கூடாது என்பது தங்களுக்குத் தெரியாததா? இங்கு எவரேனும் பொய் கூறினால் அவர்கள் அந்த விநாடியே பூலோகத்திற்குள் தள்ளப்படுவார்கள்" என்று அந்தப் பெண்மணிகள் அரண்மனை அதிகாரிகளின் ஏற்பாட்டிற்கிணங்க ரௌஹிணேயனிடம் கூறினர்.

இதைக் கேட்டான் ரௌஹிணேயன். 'என்ன? நான் சுவர்க்கத்திற்கு வந்துவிட்டேனா! இவர்கள் தேவகன்னிகைகளா! ஆகா, நான்தான் எத்தகைய பாக்கியவான்!' என்று எண்ணியபடி தன்னைப்பற்றிய அறிமுகத்தைச் சொல்ல நினைத்தவனுக்குத் திடீரென மகாவீரர் அருளிய பொன்மொழிகள் நினைவுக்கு வந்தன. அந்தப் பெண்களைக் கண்டான். 'இவர்களின் நிழல் பூமியில் பட்டுக் கொண்டிருக்கிறது. பாதங்களும் பூமியில் படிந்துதான் இருக்கின்றன. எனவே இவர்கள் தேவதைகள் அல்ல' என்ற முடிவுக்கு வந்துவிட்டான். அந்தப் பெண்களை நோக்கி மிகவும் கம்பீரமாக, "பெண்களே! என்னிடம் பொய் சொல்லத் தேவையில்லை. மன்னரின் காவலர்களிடம் நான்தான் ரௌஹிணேயன் என்று சொல்லிவிடுங்கள்! ஆனால் ஒன்று பாருங்கள், அந்த மகாவீரரின் திருவாயி னின்றும் வெளிவந்த சொற்களில ஓரிரண்டை விருப்பம் இல்லாமல் கேட்டதற்கே இத்தகைய நன்மை தரக்கூடிய அறிவைக் கொடுத்துவிட்டதே! இனி நான் அவருடைய திருவடிகளுக்கே என் வாழ்நாளை அர்ப்பணிக்க விரும்புகிறேன்" என்று கூறினான்.

காவலர்கள் ரௌஹிணேயனைக் கைது செய்து மன்னன் முன் கொண்டு சென்று நிறுத்தினர். மன்னன் ரௌஹிணேயனின் வார்த்தைகளைக் கேட்டு அவனுடைய உணர்ச்சிகளுக்கு மதிப்பளிக்க விரும்பினான். எனவே அவனை மன்னித்து விடுதலையளித்து வெளியே அனுப்பும்படிக் கட்டளையிட்டான்.

ரௌஹிணேயன் நேரே மகாவீரரின் இருப்பிடம் நோக்கிப் புறப்பட்டான். அவன் தன் பரம்பரைத் திருட்டுத் தொழிலுக்கு முழுக்குப் போட்டுவிட்டு மகாவீர ரிடம் தீட்சைபெற்று அவரது சிறந்த சீடர்களுள் ஒருவனாகத் திகழத் தொடங்கினான். ★

---

# கர்ப்ப உபநிஷதம்

'அண்ணா' சுப்ரமண்யம்

கர்ப்போபநிஷதத்தின் கருத்துக்கள் முழுவதும் ஆங்காங்கே சில விளக்கங்களுடன் இங்கே தரப்பெறுகின்றன.

உபநிஷதத்தின் பெயரும் தொடர்பும்

இந்த உபநிஷதம், கிருஷ்ண யஜுர் வேதத்தைச் சேர்ந்தது. கர்ப்பத்தில் உடல் தோன்றி வளர்வதையும் அதில் உறையும் ஜீவனுடைய நிலை அப்பொழுது எப்படிப்பட்டது என்பதையும் இது விளக்குவதனால் இதற்குக் கர்ப்போபநிஷத்து என்ற பெயர் பொருந்துவதாயிற்று.

* * *

1. சரீரம் ஐந்து பொருளாலாகி ஐந்தில் நிலை பெறுவது; ஆறு ஆசிரயமுடையது, ஆறு குணங்களுடன் கூடியது; ஏழு தாதுக்களும், மும்மலங்களும், இரண்டு யோனிகளும் (பிறப்பிடமும்) உடையது. நாலு விதமான ஆகார மயமானது.

1. பஞ்சாத்மகம் என்பது என்ன? பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்ற ஐந்து பொருளால் ஆகியிருப்பதனுல்.

2. அதில் எது பிருதிவி, எது அப்பு, எது தேயு, எது வாயு, எது ஆகாயம் என்ருல், எது கடினப்பகுதியோ அது பிருதிவி, எது திரவப் பகுதியோ அது அப்பு, எது உஷ்ணமோ அது தேயு, எது சலிக்கிறதோ அது வாயு, எது இடம் கொடுக்கிறதோ அது ஆகாயம்.

அவற்றுள் பிருதிவி தாங்குவது, அப்பு பிண்டமாக்குவது, தேயு பிரகாசப்படுத்துவது, வாயு கூட்டத்தை இயக்குவது, ஆகாயம் அவகாசமளிப்பது. தனித் தனியாகக் காது சப்தத்தைக் கேட்கவும், த்வக் ஸ்பர்சத்தை உணரவும், கண்கள் ரூபத்தைப் பார்க்கவும் நாக்கு ரஸத்தை அறியவும், மூக்கு நுகரவும், உபஸ்த்தம் ஆனந்தமனுபவிக்கவும், அபானம் மலத்தைக் கழிக்கவும் ஏற்பட்டனவாகும். புத்தியால் ஜீவன் அறிகிருன், மனதால் சங்கல்பம் செய்கிருன், வாக்கால் பேசுகிருன்.

3. ஆறு ஆசிரயம் என்றது எதனுல்? இனிப்பு, புளிப்பு, உப்பு, கைப்பு, காரம், துவர்ப்பு என்ற ரஸங்களை உணர்வதனுல். ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்ற ஏழு ஒலிகளும் இஷ்டம், அநிஷ்டம், ப்ரணீதானம் என்பவற்றுடன் சப்தம் பத்துவிதமாகிறது. வெண்மை, சிவப்பு, கருப்பு, புகைவர்ணம், மஞ்சள், பொன்னிறம் சேர்ந்த வெளுப்பு என வர்ணங்கள் ஏழு.

2. ஏழு தாதுக்கள் என்பது எதனுல்? எப்போது தேவதத்தன் என்ற (யாரோ ஒரு) மனிதனுக்கு விஷயபோகத்திற்கு உரிய திரவியங்கள் உண்டாகின்றனவோ, அப்போது அவற்றின் கூட்டுறவின் நல்ல குணத்தால் ஆறுவிதமான ரஸங்கள் தோன்றுகின்றன. ரஸத்திலிருந்து இரத்தம், இரத்தத்திலிருந்து மாம்ஸம், மாம்ஸத்திலிருந்து கொழுப்பு, கொழுப்பிலிருந்து நரம்புகள்; நரம்புகளிலிருந்து எலும்புகள், எலும்புகளிலிருந்து ஊன், ஊனிலிருந்து சுக்லம். இப்படி ஏழு தாதுக்கள். அவற்ருல் ஆனது சரீரம். ஆண் சுக்லமும் பெண் சோணிதமும் சேர்வதனுல் கர்ப்பம் உண்டாகிறது. இதை இயக்குமிடம் இருதயம். இருதயத்தினுள் ஓர் அக்கினி உள்ளது. அதில் பித்தமும், பித்தத்தினின்று வாயுவும் தோன்றுகின்றன; அந்த வாயு மீண்டும் கிரமமாக இருதயத்தை நாடுகிறது. இது மக்களை ஆளும் ஆண்டவனுடைய நியதி.

3. ருது கால ஸம்போகத்தால் ஓரிரவு கழிந்ததும் கருவானது சிறு கமலம் போல ஆகிறது. ஏழு இரவுகளில் நீர்க்குமிழி போன்ற உருவத்தை அடைகிறது. அரை மாதத்தில் பிண்டமாகிறது. ஒரு மாதத்தில் அது கடினமாகிறது இரண்டு மாதங்களில் தலை தோன்றுகிறது. மூன்று மாதங்களில் பதங்களின் பிரதேசம் தோன்றுகிறது. நாலாவது மாதத்தில் மணிக்கட்டு, வயிறு, இடுப்பு முதலிய பிரதேசங்கள் உண்டாகின்றன. ஐந்தாவது மாதத்தில் பின்புறம் மூங்கில் போன்ற முதுகெலும்பு உண்டாகிறது. ஆருவது மாதத்

தில் வாய் மூக்கு கண்கள் காதுகள் உண்டா கின்றன. ஏழாவது மாதத்தில் ஜீவனுடன் கூடுகிறது. எட்டாவது மாதத்தில் எல்லா லட்சணங்களும் பூர்த்தியாகின்றன. தந்தையின் வீரியம் அதிகமாயிருந்தால் புருஷனாகவும், தாயின் வீரியம் மேம்பட்டிருந்தால் ஸ்திரீ யாகவும், இரண்டும் சமமானால் அலியாகவும் ஆகிறது. மனக்கலக்கத்தால் குருடர்களாகவும், மூடவர்களாகவும், கூனர்களாகவும், குள்ளர் களாகவும் பிறக்கிறார்கள். ஒன்றுக்கொன்று வாயுவால் பீடிக்கப்பட்டு சுக்லம் இரண்டு பட்டால் அப்போது இரட்டைப் பிள்ளைகள் பிறக்கிறார்கள். பஞ்சபூத வடிவான சரீரம் ஸாமர்த்தியமுடையதாகும்போது ஐந்து ஞானேந்திரியங்களை ஆளும் புத்தியும், அதனால் கந்தம் ரஸம் முதலியவற்றை அறியும் திறமையும் உண்டாகின்றன. அப்பொழுது அந்த ஜீவன் அழியாத அக்ஷரமாகிய ஓங்காரப் பொருளைச் சிந்திக்கிறான். அந்த ஓரெழுத்தை உணர்ந்ததும் (பஞ்சபூதங்கள், மனம், புத்தி, அகங்காரம் என்ற) எட்டுப் பிரகிருதிகளும் அவற்றின் பதினாறு விகாரங்களும் தேகத்தில் அதை உடைய தேகியாகிய ஜீவனுடையவை ஆகின்றன என்பதும் உணரப்படுகிறது தாயார் உண்டதும் பருகியதும் தாயுடன் இணைந்த நாடிகளில் பரவி, அதன் மூலம் குழந்தையின் பிராணன் . திருப்தியடைகிறது. பிறகு ஒன்பதாவது மாதத்தில் எல்லா லட்சணங்களும் ஞானேந்திரியங்களும் கர்மேந்திரியங்களும் பரிபூர்ண நிலையை எய்துகின்றன. அப்பொழுது அந்த ஜீவனுக்கு முந்திய பிறவியின் ஞாபகம் உதிக்கிறது. தான் செய்த புண்ணியச் செயல் களையும் பாவச் செயல்களையும் உணர்கிறது.

4. என்னால் முன்பு ஆயிரக்கணக்கான யோனிகள் பார்க்கப்பட்டும் பலவிதமான ஆகாரங்கள் புசிக்கப்பட்டும் பலவிதமான ஸ்தன்யபானங்கள் (தாய்ப்பால்) பருகப்பட்டும் ஆகிவிட்டன. திரும்பத் திரும்பப் பிறந்தும் இறந்துமாயிற்று. நல்லதோ பொல்லாததோ எந்தக் கருமம் எந்தச் சுற்றத்தின் பொருட்டு என்னால் செய்யப்பட்டதோ அந்தச் சுற்றத்தார் பயனை அனுபவித்துவிட்டுப் போய்விட்டார்கள். நானே தன்னந்தனியனாக அதனால் தவிக் கிறேன். யோனியினின்று வெளிவந்தால் இனி நான் பாவத்தை போக்குபவரும் கருமப் பயனிலிருந்து முக்தியளிப்பவருமான நாராய ணனைச் சரணடையப் போகிறேன். யோனி யினின்று வெளிவந்தால் இனி நான் பாவத்தைப் போக்குவதும் கருமப் பயனிலிருந்து விடுதலை அளிப்பதுமான ஸாங்க்ய (ஞான) யோகத்தை அப்பியாஸம் செய்யப்போகிறேன். யோனியி னின்று வெளிவந்தால் ஸநாதனப் பிரம் மத்தைத் தியானிக்கப் போகிறேன் — என்று இவ்வாறு எண்ணுகிறான்.

பிறகு யோனித்துவாரத்தை அடைந்து, யந்திரத்தால் பீடிக்கப்பட்டவனைப் போல் மிகுந்த துன்பத்திற்குள்ளாகிப் பிறந்தவுடன் விஷ்ணுமாயையாகிற வாயுவால் தொடப்பட்டு, அப்பொழுது நினைவிழந்து, பிறப்பிறப்பையோ புண்ணிய பாவச் செயல்களையோ எதையும் அறிவதில்லை.

5. சரீரம் என்ற பெயர் எக்காரணத்தால்? ஞானாக்கினி, தர்சனாக்கினி, கோஷ்டாக்கினி என்ற அக்கினிகள் இதை ஆசிரயித்திருப் பதனால் இதற்குச் சரீரம் எனப் பெயர் பொருந்து வதாயிற்று. அவற்றுள் கோஷ்டாக்கினி என்பது, உண்டது பருகியது லேஹ்யம். சோஷ்யம் எல்லாவற்றையும் (வயிற்றில் மீண்டும் சமைத்து உடலில் சேர்க்கப்) பக்குவப் படுத்துவது. தர்சனாக்கினி, ரூபங்களைக் காண்பது. ஞானாக்கினி என்பது, நல்லதையும் பொல்லாததையும் பகுத்தறிவது. முகத்தில் ஆஹவநீயாக்கினியாகவும், வயிற்றில் கார்ஹ பத்ய அக்கினியாகவும், இதயத்தில் தக்ஷிணாக் கினியாகவும், அந்த மூன்றும் இடம் கொண்டுள்ளன. அந்த அக்கினிகளில் உடலில் இடைவிடாது யாகம் நடைபெறுகிறது. அந்த யாகத்தின் அங்கங்கள் பின் வருமாறு:-

ஆத்மா யஜமானன் (யாகம் செய்பவன்). மனது பிரம்மா. உலோபம் (காமம், கோபம்) முதலியவை யாகத்தில் பலியாக வேண்டிய பிராணிகள். மனோதிடம் தீக்ஷை. மனநிறைவும் ஞானேந்திரியங்களும் யாக பாத்திரங்கள். கர்மேந்திரியங்கள், ஹோமம் செய்யப்படும்

ஹவிஸ் (அன்னம்). தலை, கபாலம் எனும் பாத்திரம். தலைமயிர், தர்ப்பை. முகம், உட்புறமுள்ள யாகமேடை. தலை, சதுஷ்கபாலம். இரண்டு வரிசைப் பற்களும் ஷோடச கபாலம்.

யாகத்தில் பயன்படும் மற்றப் பொருள்களாகவும் இடங்களாகவும் எலும்பு, நரம்பு, சதை முதலியவை கருதப்படுகின்றன. மர்மஸ்தானங்கள் நூற்றேழு ஸந்திகள் நூற்றெண்பது. மற்ற நரம்புகள் எழுநூறு. ஊன் ஐந்நூறு. முன்னூற்றறுபது எலும்புகள். நாலரைக் கோடி உரோமங்கள். எட்டுப்பலம் எடையுள்ள இதயம். பன்னிரண்டு பலம் நாக்கு. ஒரு சேர் பித்தம். இரண்டு சேர் கபம். கால் சேர் சுக்லம். இரண்டு சேர் கொழுப்பு. மல முத்திரம் ஆஹார அளவுப்படி, நியமமில்லாதது. இப்படிச் சரீர தத்துவத்தை ஆராய்ந்தறிந்து அதிலிருந்து விடுதலை அடைய வேண்டும் என்ற மோட்ச சாஸ்திரம் இங்ஙனம் பிப்பலாத மகரிஷியால் உபதேசிக்கப்பட்டதாகும். ☆

# யோகவாசிட்ட சாரம்

திரட்டும் தமிழும்: எம். நாகசுப்மண்யம்

1. ஒரு குழந்தை தன்னிடம் இருக்கும் மண்ணால் செய்த யானைப் பொம்மையை உண்மையான யானை என்று நினைத்து விளையாடி மகிழ்கிறது. அது போலவே அஞ்ஞானியான மனிதன் தன் ஸ்தூல உடலையே ஆத்மாவாகப் பாவித்து உலக விவகாரங்களை நடத்திச் செல்கிறான்.

2. பொன்னால் செய்த வளையல் போன்ற ஆபரணங்கள் வடிவத்தில் பலவாக இருக்கின்றன. எனினும் அவை அனைத்தும் தங்கம் என்ற நிலையில் ஒன்றேயாகும். அது போலவே நாமரூபத்துடன் பிரபஞ்சம் பலவாகத் தோற்றமளித்தாலும் உண்மையில் இருப்பது ஆத்மா ஒன்றுமட்டுமே ஆகும்.

3. ஒரே உடலில் பல அங்கங்கள் இருக்கின்றன; களிமண் என்ற வஸ்துவைக் கொண்டு பல வடிவங்களில் மண்பாண்டங்கள் செய்யப்படுகின்றன. அது போலவே நித்திய வஸ்துவாகிய ஒரே பரம்பொருள் அசையும் உயிர்களாகவும் அசையாத ஜடப் பொருள்களாகவும் தோற்றமளிக்கிறது.

4. ஸ்படிகக்கல், தண்ணீர், நெய், கண்ணாடி ஆகியவற்றில் ஒரே முகம் பலவிதமாகப் பிரதிபலிக்கிறது. அது போலவே ஒரே பரம்பொருள் பலவித மக்களின் உள்ளத்தில் ஒரேசமயத்தில் பிரதிபலிக்கிறார்.

5. நிர்மலமான ஆகாயத்தை எதுவும் கறைப்படுத்த இயலாது. எனினும் அது தூசியாலும் புகையாலும் மேகங்களாலும் கறைப்படுத்தப்பட்டதைப் போன்ற ஒரு பொய்யான தோற்றத்தைத் தருகிறது. அதுபோலவே, பரிசுத்த ஆத்மா மாயையின் தொடர்பால் களங்கமடைந்ததைப் போன்ற ஒரு பொய்யான தோற்றத்தைத் தருகிறது.

6. கரும்பிலிருந்து சர்க்கரையும், எள்ளிலிருந்து எண்ணெயும், விறகிலிருந்து நெருப்பும், பாலிலிருந்து வெண்ணெயும், பூமியிலிருந்து உலோகமும் மனித முயற்சியினால் பெறப்படுகின்றன. அது போலவே உடலில் குடிகொண்டிருக்கும் ஆத்மாவையும் அளப்பரிய பெருமுயற்சியினாலேயே அனுபூதியில் அறியமுடியும்.

7. விலையுயர்ந்த நவரத்தினங்கள் பதித்த ஒரு பாத்திரத்தின் உள்ளே வைத்துள்ள ஒரு பெரிய விளக்கு உள்ளும் புறமும் பிரகாசத்தைத் தருகிறது. அது போலவே, ஒரே ஆத்மா எல்லாவற்றையும் பிரகாசிக்கச் செய்கிறது.

8. விரிந்து பரந்திருக்கும் இந்தப் பிரபஞ்சம் முழுவதும் ஆத்மா வியாபித்திருக்கிறது. ஆகாயத்திலும் சூரியனிலும் ஆபரணங்களிலும் பூமிக்கு அடியிலுள்ள புழுக்களிலும் கூட ஆத்மா வியாபித்திருக்கிறது.

9 சைதன்யசொரூபமாக இருப்பது பிரம்மம்; உலகம் முழுவதுமே பிரம்மம்; எல்லாவித மூலப்பொருள்களும் பிரம்மம்; நானும் பிரம்மம்; என் பகைவரும் பிரம்மம்; என் நண்பர்களும் சுற்றத்தாரும் பிரம்மம்.

10. மனம், கேட்கப்படுவது, உணரப் படுவது, மற்றுமுள்ள எல்லாமும் ஆத்மாதான். இதுவே எல்லாத் தத்துவ ஞானங்களின் சாரமாகும்.

11. சித்திரத்தில் இருக்கும் பச்சைப்பசே லென்ற கொடிகளைக் காற்று பாதிக்காது. அது போலவே ஆத்ம விசாரம் என்ற கண்ணாடியில் எப்போதும் தன் பிம்பத்தைக் காண்பவனையும் (எப்போதும் ஆத்மவிசாரணையில் மூழ்கி நிலை பெற்றிருப்பவனையும்) துன்பங்கள் பாதிக்க மாட்டா.

12. 'இந்த அகண்டமான பிரபஞ்சம் என்பதுதான் என்ன? நான் யார்?' என்று எப்போதும் தீவிரமாக ஆழ்ந்து சிந்திப்பதில் நாட்டமுள்ளவனுக்கு இந்த உலகம் பொய்யாகத் தோற்றமளிக்கிறது.

13. சாதுக்களின் தொடர்பினாலும், சம்சாரத் தில் பந்தப்படுத்தும் எல்லாவித எண்ணங் களையும் புறக்கணிப்பதனாலும், இந்த உடலுக்கு மரணம் வரப்போவது நிச்சயம் என்ற எண்ணம் நிலை பெறுவதனாலும் — உள்ளத்தில் பதிந் திருக்கும் தீய சம்ஸ்காரங்கள் அழிந்து போகின்றன.

14. ஓ ராமா, சுகமான பஞ்சுமெத்தையில் உறங்கிக் கொண்டிருக்கும்போது, கனவு உலகில் கனவு உடலுடன் மனம் போன இடங்களி லெல்லாம் சஞ்சரிக்கிறாய். ஆனால் இப்போது விழித்திருக்கும்போது அந்தக் கனவு உலகில் சஞ்சரித்த உன் உடம்பு எங்கே போயிற்று?

15. விழிப்பு நிலை, கனவு நிலை, ஆழ்ந்த உறக்க நிலை ஆகியவற்றுக்கு அப்பாற்பட் டிருக்கும் உன் சொந்த இயல்பாகிய சுத்த சைதன்யத்தில் (ஆத்மாவில்) ஊன்றி இரு.

16. நீ அறிபவனும் அல்ல, அறியப்படுவனும் அல்ல; எல்லாவிதக் கருத்துக்களையும் ஒதுக்கித் தள்ளி நீ உன் சொந்தச் சொரூபமாகிய ஆத்மா விலேயே நிலைத்திருப்பாயாக.

17. ஓ ராகவா, ஜடப்பொருளான இந்த உடலுக்கும் உனக்கும் என்ன சம்பந்தம் இருக்கிறது? உடலின் பொருட்டு ஏற்படும் சுகதுக்கங்களால் பாதிக்கப்பட்டு நீ ஏன் வீணாகப் பரிதாபகரமான நிலையில் இருக்கிறாய்?

18. இந்த உடல் மரத்துண்டைப் போலவோ, மண்ணாங்கட்டியைப் போலவோ தான் இருக்கிறது என்று தெரிந்துகொள்வது, உள்ளே இருக்கும் பரமாத்மாவை அறிந்து கொள்வதற்கு உதவி செய்யும்.

19. தன் முன்னால் இருக்கும் பொருள்களை ஸ்படிகக்கல் பிரதிபலிக்கிறது. அது போலவே எந்த ஒரு பற்றுதலுக்கும் இடம் தராமல் உன் கடமைகளைச் செய்வாயாக.

20. எல்லாம் பிரம்மமே என்ற எண்ணம் உள்ளத்தில் நிலைபெறுவது முக்திக்கு வழி கோலும். எனவே அஞ்ஞானமாகிய துவைதக் கொள்கையை ஏற்க முற்றிலும் மறுத்துவிடு.

21. நீ உன்னை ஸ்தூல உடல் என்ற நினைவி லிருந்து விலக்கிக்கொண்டு, ஆத்மாவில் நிலை பெற்று ஆத்மாவிலேயே கலந்து ஒன்றாகிவிடு. அப்போது உலகிலுள்ள மற்ற எல்லாமே புல்லைப் போலப் பொருளற்றதாகிவிடும்.

22. உண்மைப் பொருளாகிய பரப்பிரம் மத்தின் உதவியால் இந்தப் பொய்யான உலகத்தைப் புரிந்துகொண்டு மனதை உள் முகமாகத் திருப்பினால் சுயஞ்சோதியாகப் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஆத்மாவைத் தெளிவாகக் காண்பாய்.

23. 'இந்தப் பிரபஞ்சம் முழுவதுமாக நானே இருக்கிறேன். நானே அழியாத பரமாத்மா. ஆதியும் அந்தமும் எனக்குக் கிடையாது' என்று இவ்விதம் ஆழ்ந்து சிந்தனை செய்வாயாக.

24. 'இந்த உலகிலுள்ள எல்லாப் பொருள் களும், பகுக்க முடியாததும் மாற்றமுடியாததும் சுத்த சைதன்யமானதும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருப்பதுமாகிய ஒரே பிரம்மம் தான்' என்று சிந்தனை செய்வாயாக.

25. 'நானே அல்லது வேறு எந்தப் பொருளோ கிடையாது; எங்கும் எப்போதும் பரிபூரண ஆனந்தமயமாகத் திகழும் பிரம்மம் தான் நிறைந்திருக்கிறது' என்று அமைதி யாகத் தியானம் செய்வாயாக.

26. சமுத்திரம் என்பது தண்ணீரைத் தவிர வேறில்லை. அது போலவே, உலகிலுள்ள எல்லாப் பொருள்களும், ஆகாசத்தைப் போல எங்கும் பரந்திருக்கும் பிரம்மத்தைத் தவிர வேறில்லை. ★

# கபாலக் கலம்

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

**இறைவன்** தன் திருக்கரத்தில் பிரமனுடைய கபாலத்தை ஏந்தியிருக்கிறான். சிவபெருமானுக்கு ஐந்து தலைகள். பிரமனுக்கும் ஐந்து தலைகள் இருந்தன. ''சிவனுக்கும் ஐந்துதலை; எனக்கும் ஐந்துதலை. நானும் அவனும் சமம்'' என்று பிரமன் அகங்காரம் கொண்டான். படைத்தல் என்னும் பொறுப்பான தொழிலைச் செய்கிறவன் அவன். அத்தகைய சிறந்த பதவியில் உள்ளவர்கள் நான் என்ற அகம்பாவம் கொண்டால் அவர்கள் செய்யும் கடமைகள் தவறிவிடும். அந்தத் தொழிலைச் செய்யும்படி பிரமனுக்கு ஆணையிட்டவன் சிவபெருமான். தன் ஆணையை ஏற்றுப் பணிபுரியும் அதிகாரிகள் தம் கடமையிலே உள்ளத்தைச் செலுத்தாமல் அகங்காரம் கொண்டு நின்றால் அவர்களை அந்தப் பணியில் அமைத்த மேலதிகாரி அவர்களுக்கு உரிய தண்டனையை அளித்துத் திருத்த வேண்டும். சிவபெருமான் பிரமனுடைய அகங்காரத்தைப் போக்க எண்ணினான். ஐந்துதலை இருப்பதைக் கொண்டு அவனுக்குத் தருக்கு உண்டாயிற்று என்று உணர்ந்து அந்தத் தலைகளில் ஒன்றைக் கிள்ளினான். அதுமுதல் பிரமன் நான்முகன் ஆனான்.



கிள்ளிய தலையின் கபாலத்தைச் சிவபெருமான் தன் கையில் வைத்துக்கொண்டான். அதைக் குழிவான பாத்திரத்தைப் போலத் திருப்பி வைத்துக்கொண்டு பிச்சை வாங்கத் தொடங்கினான். அவனை வெறுப் பிச்சைக்காரனென்றும் தாம் அவனுக்குப் பிச்சையிடும் பெரியவர்களென்றும் நினைத்து வருகிறவர்களின் அகந்தையையும் அவன் போக்கினான். ''இறைவனே பிச்சை எடுக்கிறான். அவனுடைய பிச்சைக் கலம் நிறைய நாம் இடுவோம்'' என்று எண்ணிய பலர் அதில் சோற்றையும் பிறபொருளையும் இட்டார்கள். அது நிரம்பவே இல்லை. ''இந்தக் கலம் நிரம்ப இட்டால்தான் என் பசி தணியும். அரைகுறையாக இட்டால் என் பசி தீராதே!'' என்று சொல்லி இறைவன் எல்லாரிடமும் பிச்சை கேட்டான். இந்திராதி தேவர்கள் தம்மிடம் உள்ளவற்றையெல்லாம் இட்டுப் பார்த்தார்கள். அந்தப் பிச்சைப் பாத்திரத்தில் பாதிகூட நிரம்பவில்லை. மிடுக்கோடு வந்து பொருளை இட்டவர்கள் யாவரும் திகைத்துப் போனார்கள். 'இது என்ன? எத்தனை போட்டாலும் நிரம்பாக் குழியாக இருக்கிறதே!' என்று அலுத்துக் கொண்டார்கள். 'உங்கள் சக்தி இவ்வளவுதானா?' என்று கேட்டுச் சிரிப்பது போல அந்தக் கபாலம் பல்லைக் காட்டிக்கொண்டிருந்தது.

வருணன் வந்தான். அவன் கடல்களுக்கு அதிபதி. பல வகையான கடல்கள் அவன் ஆட்சியில் இருந்தன. பால், அமுதம், உப்பு நீர், கருப்பஞ்சாறு, தயிர், நன்னீர், கள் என்பவை நிரம்பிய கடல்கள் ஏழு உண்டு. அவற்றையெல்லாம் இறைவனுடைய பிச்சைப் பாத்திரத்தில் பெய்தான். கரையற்ற கடலில் உள்ள நீரே போதும் இதை நிரப்ப என்று எண்ணி வந்த அவன் ஒவ்வொரு கடலாகப் பெய்யப் பெய்ய, அந்தக் கலம் நிரம்பிய பாடில்லை. எத்தனை கடல்களைப் பெய்தாலும் அது சிறிதுகூட நிறையவில்லை.

> ஓத நெடுங்கடல்கள் எத்தனையும் உய்த்துஅட்ட
> ஏதும் நிறைந்ததில்லை என்பரால்.

'பார்த்தால் சிறிய கபாலமாக இருக்கும் இது இத்தனையையும் விழுங்கிவிட்டு, இன்னும் கொண்டுவா, கொண்டுவா என்கிறதே!' என்று வியந்தார்கள். 'இதை எவ்வாறு நிறையச் செய்வது?' என்று மயங்கினார்கள்.

இப்படி நிகழ்ந்ததென்று அடியார்கள் சொல்லிக்கொண்டார்கள். அதைக் காரைக்கால் அம்மையார் கேட்டிருக்கிறார்.

'இப்படி எல்லாம் சொல்கிறார்களே; அந்தக் கலம் என்றும் நிரம்பாதோ?' என்று எண்ண மிட்டார்.

ஆனால் அடுத்தபடி அவர் கேட்டறிந்த செய்தி அவருக்கு மிக்க வியப்பை உண்டாக் கியது.

அந்தக் கலம் நிரம்பிவிட்டதாம். எப்போது, எங்கே, எப்படி?

சிவபெருமான் தாருகாவனத்து முனிவர் களின் அகம்பாவத்தை அடக்க எண்ணினான். அவர்கள் வேதமும் வேள்வியுமேபோதுமானவை என்று நினைந்து இறைவனிடம் பக்தி பண்ணாமல் இருந்தார்கள். கர்மமே முக்தி யைத் தரும் என்று எண்ணினார்கள். இறைவனு டைய திருவருள் இல்லாமல் எதையும் அடைய முடியாது என்ற உண்மையை அவர்கள் அறிய வில்லை. அவர்களுடைய மனைவிமாரும் அவர் களுடைய எண்ணத்துக்கே ஆதரவு தந்தார்கள். அவர்களுடைய உறுதியைக் குலைக்க எண்ணிச் சிவபெருமானும் திருமாலும் ஒரு விளையாட்டை நிகழ்த்தினார்கள். சிவபெருமான் திகம்பரனாக நின்று கையில் பிரமகபாலமாகிய பிச்சைப் பாத்திரத்தை ஏந்திக்கொண்டு தாருகாவனம் சென்றான். திருமால் மோகினிக் கோலம் பூண்டு அங்கே சென்றார். சிவபெருமானுடைய மோகன வடிவத்தைக் கண்டு முனிவர்களின் மனைவி மார்கள் அவனுக்குப் பிச்சையிடுபவர்களைப் போல வந்து அவன் அழகிலே சொக்கி நின்றார்கள். அவ்வாறே மோகினியைக் கண்டு முனிவர்கள் மயங்கி நின்று பல்லை இளித் தார்கள் அவர்களுடைய மன உறுதி குலைந்து விட்டது.

சிவபெருமானுக்குப் பிச்சையிடும் பொருட்டு முனிவர்களின் மனைவிமார் கையில் சோற்றைக் கொண்டுவந்தார்கள். இறைவனுடைய பெரு மையை அறியாத பேதையராகிய அந்தப் பெண்கள், அவனுடைய அழகிலே மயங்கிக் கையில் சோறும் நெஞ்சில் மோகமும் உடைய வராக வந்தார்கள். சோறிடும் பெண்களை அன்னையராகப் பார்த்தான் சிவபெருமான். அவர்களோ அவனை அழகனாகக் கண்டார்கள். அவர்கள், இன்னது செய்கிறோம் என்ற நினைவே இல்லாமல், அவன் அழகிலே அறிவையே பறிகொடுத்துப் பிச்சையிட்டார்கள். அவர்கள் கண்ணிலும் கருத்திலும் இறைவனே நிறைந்திருந்தான்.

அத்தனை கடல்களையும் உண்டு இன்னும் நிரம்பாத விரிந்த இடத்தையுடைய கபால மாகிய அந்தப் பிச்சைக் கலம் இப்போது நிரம்பிவிட்டது. என்ன ஆச்சரியம்!

அந்த மங்கையர் தம் கணவரை மறந்து சூழ்நிலையை மறந்து நாணத்தையும் நழுவ விட்டு அரைகுலையத் தலைகுலைய இறைவன் ஒருவனையே கண்டும் கருதியும் அந்தப் பிச்சையை இட்டார்கள். எல்லாம் மறந்து தன்னையே நினைக்கும் அவர்களுடைய ஒருமைப் பாட்டை உணர்ந்த ஆண்டவனுக்கு இப்போது அருள் கனிந்தது. அவனுடைய கையில் உள்ள கபாலம் இப்போது நிறைந்துவிட்டது. இது என்ன ஆச்சரியம்!

பேதையர்கள்
எண்ணாது இடும் பலியால், என்னோ
நிறைந்தவா!
கண்ஆர் கபாலக் கலம்.

அந்தப் பெண்கள் அந்தக் கலத்தின் அளவை எண்ணவில்லை. அதற்குமுன் அது நிரம்பாமல் இருந்ததை எண்ணவில்லை. தாம் நாணம் இழந்து நிற்பதை எண்ணவில்லை. தம் கணவன்மார் கண்டால் சினப்பார்களே என்றும் எண்ணவில்லை. இப்படி எந்த எண்ணமும் இல்லாமல் இறைவன் கலத்தில் பிச்சை இட வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு சென்று இட்டார்கள். அது நிரம்பிவிட்டது.

பல கடல்களாலும் நிரம்பாத அது கீழும் மேலும் சிந்த அந்த மங்கையர் இட்ட சோற்றால் நிறைவுபெற்று விளங்குவது பெரு வியப்புத்தானே? இறைவன் அவர்கள் எல்லா வற்றையும் மறந்து தன்னையே எண்ணிவந்த ஒருமைப்பாட்டை அறிந்து அதன் பெருமையைக் காட்டுவதற்காகவே இப்படிச் செய்தான் போலத் தோன்றுகிறது.

ஓத நெடுங்கடல்கள் எத்தனையும் உய்த்து அட்ட
ஏதும் நிறைந்தில்லை என்பரால்;-பேதையர்கள்
எண்ணாது இடும்பலியால் என்னோ நிறைந்தவா,
கண்ணார் கபாலக் கலம்!

[இடம் நிரம்ப உள்ளதும் இறைவன் திருக்கரத்தில் உள்ளதுமாகிய பிரமகபாலமாகிய பிச்சைப் பாத்திரமானது, அலைப்பெருக்கையுடைய ஆழமான கடல்கள் எத்துணையைப் பெய்து இட இட, சிறிதும் நிறைவுபெறவில்லை என்று சொல்கிறார்கள்; ஆனால் ஒன்றும் அறியாத பேதையர்களாகிய தாருகாவனத்து முனிவரின் மனைவிமார், பிச்சைப் பாத்திரத்தின் அளவையும் பிறவற்றையும் எண்ணாமல் இட்ட பிச்சையால் நிறைந்தவாறு என்ன வியப்பு!

ஓதம்-அலைகள் பெருகுவது. நெடுங்கடல்கள்-ஆழமான கடல்கள். எத்தனையும்—எவ்வளவையும்; எண்ணினால் பலவாக உள்ள எல்லாவற்றையும். உய்த்து அட்ட— பாத்திரத்தில் தள்ளி இட. ஏதும்—சிறிதளவும்: நிறைந்தில்லை—நிறைந்ததில்லை; விகாரம். என்பர்—என்று அறிந்தோர் சொல்வர். ஆல்: அசை. பேதையர்கள்— தாம் இன்னது செய்கிறோம் என்பதை அறியாத பேதைமையை உடைய தாருகாவனத்து முனிவர்கள் மனைவிமார். எண்ணாது— பாத்திரத்தின் அளவு, தம் நிலை முதலியவற்றை எண்ணாமல். பலி—பிச்சை. நிறைந்த—நிறைந்தவாறு; விகாரம். கண் ஆர்—இடம் நிரப்பிய. கபாலக் கலம்—பிரம கபாலமாகிய பிச்சைப் பாத்திரம்.

'கபாலக் கலம் உய்த்து அட்ட நிறைந்தில்லை என்பர்; பேதையர்கள் இடும்பலியால் நிறைந்தவா என்னோ' என்று கூட்டிப் பொருள் செய்க.]

அற்புதத் திருவந்தாதியில் வரும் 74-ஆம் பாடல் இது. ☆

---

அருள் நெறிக் கதை :

# யார் இந்தச் சனீசுவரன்?

'வால்மீகி'

**ஒன்பது** கிரகங்களிலே மிக மிக முக்கியமான கிரகம் சனிக் கிரகம். இதனிடம் பயப்படுவதைப் போல வேறு எந்தக் கிரகத்தினிடமும் மனிதர் பயப்படுவதில்லை. நாம் விரும்பாதவர் ஒருவர் வந்துவிட்டால், 'சனியன்மாதிரி வந்து தொலைத்துவிட்டான்!' என்று வெறுப்புடன் கூறுவது பலருக்குச் சகஜமாக இருக்கிறது. இது சனிக் கிரகத்தினிடம் மக்களுக்கு உள்ள வெறுப்பைக் காட்டுகிறது. ஏழரைநாட்டுச் சனியும் அட்டமத்துச் சனியும் மனிதனை என்ன பாடுபடுத்துகின்றன? நளமகாராஜனைக் காட்டுக்கு ஒட்டியது ஏழரைச் சனி; அரிச்சந்திரனை அழ அழ வைத்தது அதே சனி! சிவபெருமானையே ஏழரை வருஷகாலம் ஒரு மரப்பொந்துக்குள் சனிக்கிரகம் ஒளிந்து வாழச் செய்தது என்றால் இதன் சக்தியை யாரே வர்ணிக்க முடியும்?

இந்தச் சனி யார்? சனிசுவரன் எப்படிக் கிரகமாக மாறினான்? இத்தனை கொடூரமான சக்தி சனிக்கு எப்படி ஏற்பட்டது? இந்த விவரங்கள் மிகவும் சுவாரஸ்யமானவை.

வானசாஸ்திரப்படி சூரியனிலிருந்து 88 கோடி 61 லட்சம் மைல் தொலைவிலுள்ள ஆறுவது கிரகம் சனி. இதற்கும் நமது பூமிக்கும் இடையில் செவ்வாய், குரு ஆகிய இரண்டு கிரகங்கள் இருக்கின்றன. குருவிற்கு அடுத்தபடியாகச் சனி இருக்கிறது. கிரகங்கள் எல்லாவற்றிலும் ஜுபிடர் என்ற குருவே மிகவும் பெரியதென்றாலும் அதற்கு அடுத்த ஸ்தானம் சனியினுடையது. நமது பூமியிலிருந்து 79 கோடி 32 லட்சம் மைல்களுக்கு அப்பாலுள்ள சனிக்கிரகத்தின் குறுக்களவு 75,100 மைல்கள்; அதாவது பூமியைவிடச் சனிக்கிரகம் ஒன்பது மடங்கிற்கும் சற்று அதிகமாக பெரியது.

சூரியனை நமது பூமி சுற்றிவர ஒரு வருஷமாகிறது. சூரியனைச் சனி ஒருதடவை சுற்றிவரச் சுமார் 30 வருஷங்கள் ஆகின்றன. ஆகையால்தான் பன்னிரண்டு ராசிகளிலே

ஒவ்வொரு ராசியிலும் சனிக்கிரகம் சுமார் இரண்டரை ஆண்டுக் காலம் தங்கியிருப்பதாகக் கணக்கிடுகின்றனர். ஒருவருடைய லக்கினத்திற்கு எட்டாவது வீட்டில் சனி இருந்தால் அவருக்கு அட்டமத்துச் சனி என்பர். ஒருவருடைய சந்திர ராசிக்கு முந்திய ராசிக்குச் சனி வரும்பொழுது அவருக்கு ஏழரைச் சனி ஆரம்பித்திருப்பதாகக் கூறுவர். சந்திர ராசிக்கு முதல் ராசியில் இரண்டரை வருஷமும், சந்திர ராசியில் இரண்டரை வருஷமும், அதற்கு அடுத்த ராசியில் இரண்டரை வருஷமும் ஆக ஏழரை ஆண்டுகள் சனியின் தாக்குதல் ஜாதகருக்கு ஏற்படும். அட்டமத்துச் சனியிலும் ஏழரை வருஷச் சனியிலும் துன்பப்பட்டவர்களின் பட்டியல் மிக மிக நீளமானது. சனிக்கிரகத்தைப் பற்றிப் புராண இதிகாசங்களில் எத்தனையோ கதைகள் உண்டு.



சூரியன் துவஷ்டாவின் புதல்வியாகிய ஸஞ்ஞிகை என்பவளை மணந்து வாழ்க்கை நடத்துகையில் அவர்களுக்கு வைவஸ்வதமனு, யமன், யமுனை என்ற மூன்று குழந்தைகள் பிறந்தார்கள்.

அதன்பின் ஸஞ்ஞிகை தன் கணவனை சூரியனின் வெப்பத்தைத் தாங்கமாட்டாமல் சிறிதுகாலம் தகப்பன் வீட்டில்போய் ஓய்வெடுத்துக்கொள்ள விரும்பினாள். பிறந்த இடத்துக்குப் போக வேண்டுமென்று சொன்னால் அதற்குச் சூரியன் சுலபமாக அனுமதி தர மாட்டான் என்பது அவளுக்குத் தெரியும். பிறந்த இடத்துக்குப் போகவும் வேண்டும். அதேசமயம் சூரியனுக்கு அது தெரியவும் கூடாது. இதற்கு என்ன வழி என்று யோசித்தாள் ஸஞ்ஞிகை.

தன் சாயை அல்லது நிழலைக் கொண்டு தன்னைப்போலவே ஒரு பெண்ணைச் சிருஷ்டித்தாள். இருவரும் கண்ணாடியின் எதிரில் நின்று பார்த்தபொழுது ஒரே அச்சில் வார்த்த இரண்டு உருவங்களைப் போல அவர்கள் தோன்றினார்கள். ஸஞ்ஞிகை புதிதாகத் தான் சிருஷ்டித்த பெண்ணைப் பார்த்து, ''என் சாயையிலிருந்து அதாவது நிழலிலிருந்து நீ தோன்றியதனால் உன் பெயர் சாயாதேவி என்று இருக்கட்டும். நான் பிறந்தகம் போய்த் திரும்பும் வரையில் நீ என் கணவருடன் குடும்பம் நடத்தவேண்டும். நான் வேறு, நீ வேறு என்று அவருக்குத் தெரியவே கூடாது. நான் இருப்பதைப் போலவே அவர் நினைக்கும்படி சாதுரியமாக நீ அவருடன் பழகு. அவர் சம்பந்தப்பட்ட மட்டில் நீதான் அவருடைய மனைவி ஸஞ்ஞிகை!'' என்று சொல்லிவிட்டுப் பிறந்தகத்துக்குப் போய்விட்டாள்.

சாயாதேவி சூரியனுடன் இல்லறம் நடத்தி, ஸாவர்ணி என்ற மனுதேவரையும், சனி பகவானையும், பத்திரை என்ற பெண்ணையும் பெற்றாள். இப்படிச் சூரியனுக்கும் சாயாதேவிக்கும் பிறந்தவர் சனீசுவரன்.

சாயாதேவி தன் குழந்தைகளிடம் ஒருவிதமாகவும், ஸஞ்ஞிகை பெற்றெடுத்த வைவஸ்வத மனு, யமன், யமுனை ஆகிய குழந்தைகளிடம் வேறுவிதமாகவும் நடந்துகொண்டாள். இதைப் பற்றி யமன் தன் தந்தையான சூரியனிடம் புகார் செய்யவே, அப்பொழுதுதான் சூரியனுக்கும் சிறிது சந்தேகம் உண்டாயிற்று. சாயாதேவியைக் கடுமையாகக் குறுக்கு விசாரணை செய்து, ஸஞ்ஞிகை பிறந்தகம் போயிருக்கும் உண்மையைச் சூரியன் தெரிந்துகொண்டான். ஆனால் உண்மையில் ஸஞ்ஞிகை தனது தந்தையான த்வஷ்டாவிடம் இல்லை. அவள் பிறந்த வீட்டுக்கு வந்தபொழுது, ''மனைவி இருக்கவேண்டிய இடம் தாலி கட்டிய கணவன் வீடு. ஆகையால் உடனே திரும்பிப் போ!'' என்று அவர் மகளை விரட்டி

யடித்துவிட்டார். உடனே சூரியனிடம் திரும்பிப் போக மனமில்லாத ஸஞ்ஜிகை இமயமலைச் சாரலில் ஓர் இடத்தில் தவக்கோலம் பூண்டு வாழ்ந்து வந்தாள். ஞானதிருஷ்டியினால் அதை அறிந்த சூரியன் இமயமலைச் சாரலுக்குப் போய், மனைவியைச் சமாதானம் செய்து திரும்பி அழைத்து வந்தான். இதுதான் புராணக் கதை. இதன்படி, சனிபகவான் சூரியனுக்கும் சாயா தேவிக்கும் பிறந்த பிள்ளை. யமதர்மன் அவருடைய அண்ணன்.

ஆகமங்களில் சனியின் உருவம், உடை, விருப்பு வெறுப்புகள் ஆகியவை விரிவாக வருணிக்கப்பட்டிருக்கின்றன. இவர் கறுப்பு நிறத்தவர். கறுப்பு ஆடைகளையே விரும்பித் தரிப்பவர். ஒருகால் சிறியதாகவும், மற்றொரு கால் சாதாரணமாகவும் இருப்பதனால் மந்த கதியில், அதாவது மெதுவாக நடப்பவர்; நொண்டி நொண்டி நடப்பவர். எட்டுக் குதிரைகள் பூட்டிய இரும்பு ரதத்தில் பவனி வருபவர். வடநாட்டில் கழுகும் தென்னாட்டில் காகமும் இவர் வாகனம். வில்லைப் போன்ற ஆசனத்தில் வீற்றிருப்பவர். எப்பொழுதும் இவர் மேற்கு நோக்கி அமர்ந்திருப்பார். சூலமும் வில்லும் வரதமும் அபயமும் கொண்ட நான்கு கைகள் இவருக்கு உண்டு. கருஞ் சந்தனம், கருமலர், நீலமலர், கறுப்புக்குடை, கறுப்புக்கொடி ஆகியவற்றில் விருப்பமுள்ளவர். கொடூரமான பார்வையுடையவராகையினால் ஒருபொழுதும் நிமிர்ந்து பாராமல் கீழ் நோக்கிய பார்வையுடன் இருப்பார். மகரத்துக்கும் கும்பத்துக்கும் அதிபதியான இவருடைய சொந்த தேசம் சௌராஷ்டிரம். சனியின் அதிதேவதை யமன். ஆகவே சனிப்பிரீதி செய்பவர்கள் சனிக்கு வடப்பக்கத்தில் யமனையும், பிரத்யதி தேவதையான பிருகஸ்பதியை இடப்பக்கமும் ஆவாகனம் செய்து பூஜை செய்யவேண்டும். வானசாஸ்திர ரீதியிலும் சனிக் கிரகத்துக்கு வலப்புறம் யுரேனஸ் கிரகமும், இடப்புறம் ஜுபிடர் என்று சொல்லும் குரு அதாவது பிருகஸ்பதியும் இருப்பது குறிப்பிடத் தகுந்தது. இந்த வானசாஸ்திர உண்மையைத் தழுவியே ஆகமங்களில் பூஜாவிதிகள் ஏற்படுத்தப்பட்டிருப்பது நமது முக்கியக் கவனத்துக்கு உரியது.

எல்லாக் கடவுளருக்கும் அழகான மனித முகம் இருக்க, விக்னேசுவரருக்கு மட்டும் யானைமுகமும் துதிக்கையும் எப்படி வந்தன? ஏன் வந்தன? பிறக்கும்பொழுதே மகாகணபதி யானை முகத்துடன் பிறந்தாரா? பிறகுதான் அவருக்கு யானைமுகம் வந்ததென்றால் அப்படி வரக் காரணம் என்ன? இதை அறிய வேண்டுமானால் சனீசுவரனின் திருவிளையாடல்களை நாம் நோக்க வேண்டும்.

சூரியனுக்கும் சாயாதேவிக்கும் பிறந்த சனீசுவரன் பிறவியிலேயே கொடூரப் பார்வையுடையவர். இவருடைய பார்வையில் பட்ட யாருமே உயிரோடு வாழ்ந்ததில்லை. இப்படி ஒரு 'துக்கிரிப்' பிள்ளை தனக்குப் பிறந்ததில் சாயாதேவிக்கு அளவிட முடியாத துக்கம். இந்தப் பிள்ளையை வெளியில் எங்கும் போக விடாமல் வீட்டுக்குள்ளேயே அடைத்து வைத்திருந்தாள் சாயாதேவி.

இந்தச் சமயத்தில்தான் பரமேச்வரனுக்கும் பார்வதிக்குப் தங்க விக்கிரகம் போலப் பிறந்தார் விநாயகர். பிறக்கும்பொழுது எல்லாக் குழந்தைகளையும் போல மனிதமுகத்துடன்தான் விநாயகரும் பிறந்தார். இந்தத் தெய்வக் குழந்தையைத் தரிசிக்கத் தேவர்கள் எல்லோரும் கூட்டமாகக் கைலையங்கிரிக்குப் போனார்கள். அவர்களோடு சூரியனின் மற்றக் குழந்தைகளான வைவஸ்வதமனு, யமன், யமுனை, ஸாவர்ணி, மனு, பத்திரை ஆகிய எல்லோரும் போனார்கள். ஆனால் சனீசுவரன் போவதை மட்டும் சூரியன் அனுமதிக்கவில்லை.

"உன் பார்வை பட்டாலே விநாயகருக்கு ஆபத்து. ஆகையால் நீ போகக்கூடாது!" என்று சூரியன் கண்டிப்பாகச் சொல்லிவிட்டான்.

ஆனால் சனீசுவரனா இலேசில் விடுகிறவர்? தாயின் கால்களில் விழுந்து கெஞ்சி மன்றாடி விநாயகப் பெருமானை நேரடியாகப் பாராமல் ஓரக்கண்களினால் பார்த்துவிட்டு வருவதாக உறுதி கூறிவிட்டு, தகப்பன் சூரியனுக்குத் தெரியாமல் கைலயங்கிரிக்குப் போய்விட்டார் சனீசுவரன்.

பார்வதியின் மடியில் அமர்ந்திருந்த தெய்வக் குழந்தையை ஒவ்வொருவராகப் பார்த்து விட்டுச் சென்றார்கள். சனீசுவரன் அருகில் வந்தபொழுது, தாய்க்குக் கொடுத்த வாக்குறுதியை மனதில் நினைத்துக்கொண்டு, விநாயகப் பெருமானை ஓரக்கண்களினால் பார்த்தார். அதைக்கண்ட பார்வதிக்குச் சிரிப்பு வந்தது.

''சனீசுவரா! பரமேச்வரனுடைய குழந்தையான விநாயகனை உன்னுடைய பார்வை ஒன்றும் செய்யாது. தேவர்களுக்கெல்லாம் தேவனான மகாதேவருடைய குழந்தைக்கு உன்னால் எவ்வகை ஆபத்தும் விளையாது. தைரியமாக நிமிர்ந்து பார்!'' என்றாள் உமாதேவி.

விநாயகப்பெருமானைச் சனீசுவரன் நிமிர்ந்து பார்த்தார். அவ்வளவுதான், அடுத்த விநாடி விநாயகரின் தலை துண்டிக்கப்பட்டு வானவெளியிலே பறந்தது. அதைக் கண்ட பரமேசுவரி புலம்பி அழுதாள் இப்படி நிகழப்போகிறது என்பதை முன்கூட்டி அறிந்த பரமேசுவரன் பார்வதியைத் தேற்றினார். அவருக்குத் தெரியாமலும் அவர் விதிக்காமலும் ஓர் அணுவும் அசையாது என்பதை அறிந்த பரமேசுவரியின் கோபம் இப்பொழுது பரமேசுவரன் மீதே திரும்பியது.

''நம் குழந்தையை இப்படிச் சாகவிட்டு விட்டீர்களே! இது உங்களுக்கே நன்றாயிருக்கிறதா?'' என்று புலம்பினாள் பார்வதி.

''இன்னும் ஒன்றும் கெட்டுவிடவில்லை'' என்று கூறிய ஈசுவரன் தமது பூதகணங்களைப் பார்த்து, ''மூன்றேமுக்கால் நாழிகை வரையில் விநாயகன் உடலில் உயிர் இருக்கும். அதற்குள் முண்டமாகக் கிடக்கும் ஏதாவது ஒரு தலையைக் கொண்டு வாருங்கள்'' என்று உத்தரவிட்டார்.

பூதகணங்கள் பிரபஞ்சம் முழுவதையும் சுற்றிப் பார்த்து, மனிதத் தலை எங்கும் கிடைக்காமல், முண்டமாகக் கிடந்த ஒரு யானைத் தலையைக் கொண்டு வந்தார்கள். அதைச் சிவபிரான் விநாயகர் உடலில் பொருத்த, யானைமுகத்தோனாகவும் பிராணவஸ்வரூபியாகவும் விநாயகப்பெருமான் உயிர்பெற்றெழுந்தார். தன் மகன் கஜமுகனாக அதாவது யானைமுகத்தோனாக ஆவதற்குக் காரணமாக இருந்த சனியை நொண்டி நடக்கும்படிச் சபித்தாள் பார்வதி. ஆகையால்தான் சனீசுவரனுக்கு மந்தசுதன் அதாவது மெதுவாக நொண்டி நொண்டிச் செல்லுபவன் என்ற பெயர் உண்டாயிற்று.

சனீசுவரன் நொண்டியானதை அறிந்த அவன் தாய் சாயாதேவியும் சும்மா இருக்கவில்லை. கஜமுகனை லம்போதரனாக (தொங்கும் வயிறு உள்ளவராக) ஆகும்படி சாயாதேவி பதில் சாபம் கொடுத்தாள்.

இந்த வரலாற்றைப் பிரம்மவைவர்த்த புராணத்தில் காணலாம். தெய்வக் குழந்தையான விக்னேசுவரராலேயே சனீசுவரனின் கொடூரப் பார்வையைத் தாங்க முடியவில்லை என்றால் சாதாரண மனிதர்கள் எம்மாத்திரம்?

இதைக் கூறும்போது, விக்னேசுவரருக்கு யானைமுகம் ஏற்பட்டதற்கு விநாயக புராணத்தில் வேறு பல வரலாறுகளும் உண்டு. அந்த வரலாறுகள் சனீசுவரன் கதை சம்பந்தமான பிரம்மவைவர்த்த புராண வரலாற்றுக்கு முற்றிலும் மாறுபட்டவை.

ஒருசமயம் உலகில் மழையின்றிக் கடுமையான வறட்சி நிலவியது. நீர்நிலைகள் வற்றிப் போய் மனிதர்களும் மாக்களும் நிலைதடுமாறி நின்றனர். அப்பொழுது அயோத்தியில் சக்கரவர்த்தியாக இருந்தவன் தன் குலகுருவான வசிஷ்டரிடம் இதன் காரணத்தை வினவினான். வசிஷ்டர் ஞானதிருஷ்டியினால் காரணத்தை அறிந்து, ''சனீசுவர யோகத்தினால்தான் மழையின்றி வானமும் வையகமும் வறண்டு போய்விட்டன. சனீசுவரனைத் துதித்தால் அவர் திருப்தியடைந்து மழைபொழியச் செய்வார்'' என்று கூறினார்.

அதன்படி மன்னன் சனீசுவரனைப் பலநாள் துதித்தும் பயன் கிடைக்கவில்லை அரசனுக்குக் கோபம் வந்துவிட்டது. குலகுருவான வசிஷ்டரின் ஆசியைப் பெற்று, ரதத்தில் கிளம்பினான் மன்னன். அந்த ரதம் ஆகாய மார்க்கமாகக் கிளம்பி வருவதைக் கண்ட சனீசுவரனுக்கு இப்பொழுது பயம் ஏற்பட்டுவிட்டது. தேவாசுர யுத்தத்தில் தேவர்களுக்கு உதவிபுரிந்து தனது

வல்லமையைக் காட்டியவன் அயோத்தி மன்னன். அப்படிப்பட்ட மாவீரனிடமிருந்து தப்ப நினைத்து, சனீசுவரன் பத்துத் திக்குகளிலும் ஓடினான். அவனை அயோத்திமன்னன் விடாமல் துரத்திவரவும், சனீசுவரனுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை.

"மன்னா! இப்படி ஏன் என்னை விரட்டுகிறாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்று வினவினார் சனீசுவரன்.

அப்பொழுது அயோத்திமன்னன் சனீசுவரனைப் புகழ்ந்து தோத்திரம் செய்துவிட்டு, மழையில்லாததனால் மக்கள்படும் துன்பத்தைப் போக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டான்.

"உன் தோத்திரங்களினால் நான் பரம சந்தோஷம் அடைந்தேன். இந்தத் தோத்திரங்களை யார் பக்தியோடு சொன்னாலும் அவர்களுக்கு என் தொல்லை இருக்காது. அவர்களுக்கு நான் நன்மை புரிவேன். உலகில் இனிக் குறைவில்லாமல் மழைபொழியும். பத்துத் திசைகளிலும் நீ என்னை விரட்டிக் கொண்டு வந்தமையால் இனி நீ தசரதன் என்ற பெயருடன் விளங்குவாய்" என்று அருள் புரிந்தார் சனீசுவரன்.

ஸ்ரீ ராமனின் தந்தையான தசரதருக்கு அந்தப் பெயர் வரக்காரணமாக இருந்தவர் சனீசுவரனே என்ற வரலாறு மஹா ஸ்காந்தத்தில் காணப்படுகிறது.

சனீசுவரன் எல்லோரையும் விரட்ட, அந்தச் சனீசுவரனையே பத்துத்திக்குகளிலும் விரட்டிச் சென்ற ஒரே ஒரு மனிதர் தசரத சக்கரவர்த்திதான்.

இன்றைக்கும் சனீசுவர ஸ்தோத்திரங்களிலே,

"கோணாந்தகோ
ரௌத்ரய மோsத பப்ரு:
கிருஷ்ணச் சனி:
பிங்களமந்த ஸௌரி:"

என்று ஆரம்பிக்கும், தசரதர் செய்த சனி ஸ்தோத்திரம் விசேஷ முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. கடுமையான வறட்சி நிலவும் காலத்தில் மழைக்காகத் தசரதர் இயற்றிய சனீசுவர ஸ்தோத்திர சுலோகங்களைப் பாராயணம் செய்யும் வழக்கம் நெடுங்காலமாக இருந்து வந்திருக்கிறது.

சனிபகவானுக்காகத் தமிழகத்தில் காரைக்காலுக்கு அருகிலுள்ள திருநள்ளாறு ஷேத்திரத்தில் பிரத்தியேகமான கோயில் இருக்கிறது. ☆

---

பெண்களிடத்தில் நாம் நடந்துகொள்ளும் விதங்களிலிருந்தே புருஷர்களுடைய நியாயங்கள் வெளிப்படுகின்றன

—மகாபாரதம்

மகாராஜா பிரதாப்சிங் சாலையில் ஒரு பள்ளம் தோண்டினார். அந்தப் பள்ளத்தில் ஒரு தங்கப் பாளத்தை வைத்து பெரிய கல்லைப் போட்டு மூடி வைத்தார். அந்த வழியாகப் போனவர்கள் யாவரும் நடுச்சாலையில் கல்லைப் போட்டவரைத் திட்டிக்கொண்டே சென்றார்கள். ஒருவராவது அதை அப்புறப்படுத்த முனையவில்லை. மகாராஜா அந்த இடத்தில் ஒரு கூட்டத்தைக் கூட்டினார். ஒரு வேலையாளை விட்டு, அந்தக் கல்லை நகர்த்தும்படி கட்டளையிட்டார். கல்லை அகற்றியதும் அடியில் இருந்த தங்கப் பாளத்தை எல்லோரும் பார்த்து வியப்படைந்தார்கள். அரசர் கூறினார்:— "இந்த உலகில் மக்கள் சோம்பேறிகளாகவும் செயலிழந்தவர்களாகவும் உள்ளனர். கல்லை அகற்ற வேண்டும் என்ற நினைவற்றவர்களாக இருந்ததனால் தங்கப் பாளம் ஒருவருக்கும் கிடைக்கவில்லை. ஆகவே, சோம்பலை ஒழி; எப்பொழுதும் விழிப்புடனும் தூய்மையுடனும் இருந்தால் வெற்றிமேல் வெற்றி பெறுவாய்."

— ஒரு துறவி



# ஸ்ரீராமநாம மகிமை

ஆர். ரங்கநாதன்

ராமநாமத்தின் விசேஷத்தை ஒரு கவி மிகவும் சாதுர்யமாகப் பின்வருமாறு கூறுகிறார்:-

ராமர்: சீதை, உனக்கு என்னைப் பிடித்திருக்கிறதா? எனது நாமம் பிடித்திருக்கிறதா?

சீதை: உங்கள் நாமம்தான் பிடித்திருக்கிறது.

ராமர்: ஏன் அப்படிச் சொல்கிறாய்? அதற்கு என்ன காரணம்?

சீதை: அசோகவனத்தில் நான் உயிர் விடும் நிலையில் இருந்தபோது, ஆஞ்சனேயன் உங்கள் நாமத்தையும் உங்கள் கதையையும் சொன்னதால்தான் நான் உயிர் பிழைத்தேன்.

* * *

'ஓம் நமோ நாராயணாய' என்பது மாதவ விஷ்ணு மந்திர அஷ்டாக்ஷரமாகும். 'ஓம் நமசிவாய' என்பது பஞ்சாட்சரமாகும். இந்த இரண்டு முக்கியமான பீஜ மந்திரங்களில் உள்ள 'ரா' வும், 'ம' வும் சேர்ந்ததே ராமநாமமாகும் என்கிறார் ஸ்ரீ தியாகராஜர்.

தியாகராஜரின் கீர்த்தனங்களில் ராமநாமமே முதலிடம் பெற்றது.

* * *

ஒரு சமயம் சிவபெருமான் தமது கணங்களைக் கூப்பிட்டு, ''யார் முதலில் பூமியைப் பிரதட்சிணம் செய்துவிட்டு என்னிடம் வருகிறாரோ, அவருக்குப் பெரும் பதவியைத் தரப் போகிறேன்; அவரே கணங்களுக்கு நாயகர் ஆவார்'' என்றார்.

இவ்விதம் சிவனார் கூறக்கேட்டதும், ஒவ்வொருவரும் விரைந்து பூமியைப் பிரதட்சிணம் செய்யத் துவங்கினர்.

பார்வதிக்குப் பரமசிவன் உபதேசித்த ராமநாம மகிமையைப்பற்றிக் கேட்டுக் கொண்டிருந்தவர் பிள்ளையார். எனவே 'ராம' என்ற இரண்டு எழுத்துக்களைப் பூமியில் எழுதினார்; அவற்றுக்கு அர்க்கியம், பாத்யம், ஆசமனீயம், புஷ்பம், தீபம், தூபம் ஆகியவற்றைச் சமர்ப்பித்து மூன்று தடவை பிரதட்சிணம் செய்தார்.

பின்னர் அவர் பரமசிவனிடம் வந்து, ''நான் ராமநாமத்தை எழுதி, பூஜித்து, பிரதட்சிணம் செய்ததனால் பூமியைப் பிரதட்சிணம் செய்த பலன் எனக்குக் கிடைத்துவிட்டது'' என்று கூறினார்.

இவ்விதம் பரமசிவனின் ஆசியைப் பெற்றுப் பிள்ளையார் 'கணநாதன்' என்ற பெயர் பெற்றார்.

* * *

ராம நாமத்தை ஜபம் செய்கிறோம். அப்போது 'ரா' என்ற எழுத்தை உச்சரிக்கும் போது வாய் அகல விரிகிறது. அகவே உள்ளே இருக்கும் எல்லாப் பாவங்களும் வெளியேறி விடுகின்றன. பிறகு 'ம்' என்று உச்சரிக்கும் போது உதடுகள் ஒன்றுசேர்ந்து வாயை அடைத்துவிடுகின்றன. அந்த நிலையில் ஒரு பாவமும் உள்ளே திரும்பி வர முடியாது

* * *

பக்தியை வெளிப்படுத்தும் ஒன்பது முறைகளை நவவித பக்தி என்று ஸ்ரீமத் பாகவதம் கூறுகிறது. அவற்றுள் கீர்த்தனம் என்பதையே துளசிதாசர் மிகவும் முக்கியமானதாகக் கருதினார்.

''கீர்த்தனம் என்பதில் ராமநாம ஜபம் மிகவும் சக்தி வாய்ந்தது. இந்தக் கலிகாலத்தில் நியாயம், வைசேடிகம், சாங்கியம், யோகம், பூர்வ மீமாம்சை, உத்தர மீமாம்சை, நான்கு வேதங்கள், வேதாந்த சாஸ்திரங்கள் ஆகியவற்றை அத்தியயனம் செய்வது சுலபமல்ல; உபவாசம், தீர்த்த யாத்திரை ஆகியவற்றை எல்லோராலும் கடைப்பிடிக்க இயலாது; மோட்சம் பெற ராமநாம பஜனை ஒன்றுதான் சாத்தியம், அதுவே போதுமானது'' என்பது துளசிதாசரின் முடிவாகும்.

* * *

பார்வதி பரமேச்வரனிடம், ''பகவானின் ஆயிரம் திருநாமங்களையும் சொல்ல இயலாது. அதற்குத் துல்யமான ஓர் உபாயம் சொல்ல வேண்டும். [கேநோபாயேன லகுனா விஷ்ணோர் நாம ஸஹஸ்ரகம்। பட்யதே பண்டிதைர் நித்யம் ச்ரோதுமிச்சாம்யஹம் ப்ரபோ॥]'' என்று வினவினாள்.

அதற்கு ஈச்வரன் தெரிவித்த பதில் வருமாறு:-

''ராமநாமத்தை ஒருதரம் சொன்னால் போதும். அது பகவானது ஸஹஸ்ரநாமத்தைச் சொல்வதற்குச் சமமாக ஆகிவிடுகிறது.''

இவ்விதம் சிவபெருமான் சொல்வதாக ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்தில் அமைந்திருக்கும் சுலோகம் வருமாறு :—

ஸ்ரீராம ராம ராமேதி
ரமே ராமே மனோரமே!
ஸஹஸ்ரநாம தத் துல்யம்
ராமநாம வரானனே!!

• • •

ராமநாமம் பக்தர்களுக்கு மிகவும் நல்ல பாதுகாப்பைத் தரும்; பகைவர்களுக்குப் பயத்தை உண்டுபண்ணும்; அதர்மத்தை அழிக்கும்; உத்தமர்களுக்கு இஷ்டசித்தியையும் உத்தம லோகங்களையும் தரும்.

ஆரண்ய காண்டத்தில் மாரீசன், ''ராம நாமத்தைச் சொன்னாலே எனக்குப் பயமாக இருக்கிறது'' என்று ராவணனிடம் சொல்கிறான்.

மாரீசன் : நான் இந்த வனத்தில் மான்தோல், மரவுரி உடுத்தியவனாக ஸ்ரீராமனை எங்கே பார்த்தாலும் பார்க்கிறேன். இவ்விதம் இந்த வனம் முழுவதையும் ராமமயமாகப் பார்த்துப் பயப்படுகிறேன்.

ராவணன் : சீதை என்னை அடைந்துவிட்டாளானால் அவளை ரத்தின பூஷிதையாகச் செய்து விடுவேன்.

ராமனின் நினைவே மாரீசனுக்குப் பயத்தைத் தருகிறது. எனவே ராவணன் சொன்ன 'ரத்னம்' என்ற சொல்லைக் கேட்ட மாரீசன், ''ரத்ன என்ற சொல்லில் இருக்கும் 'ர' காரத்தைக் கேட்கும்போதுகூட எனக்குப் பயம் உண்டாகிறது'' என்று கூறுகிறான்.

• • •

கருட புராணம் ஸ்ரீராமநாமத்தை 'அமுதம்' என்று குறிப்பிடுகிறது. அந்தக் கருத்தும் சுலோகமும் வருமாறு :—

சம்சாரம் என்ற வழியில் நீண்டதூரம் நடந்து வேட்கையினால் மயங்கி மூர்ச்சித்து இருப்போருக்கு, தாமரைக்கண்ணனான ராமபிரானுடைய நாமசங்கீர்த்தனமாகிய அமுதம் சோருக ஊட்டமளிக்கிறது.

கர்சதாம் தூரமத்வாநம்
த்ருஷ்ணா-மூர்ச்சித-சேதஸாம்!
பாதேயம் புண்டரீகாக்ஷ-
நாம - ஸங்கீர்த்தநாம்ருதம் !!

• • •

# ஒரு வியாபாரம்

சுவாமி அமரானந்தர்

நாணயங்கள் புழக்கத்தில் இல்லாத பண்டைக் காலத்தில் பண்ட மாற்றுதல் என்னும் வாணிபம் இருந்திருக்கிறது. அதாவது ஒரு பொருளைக் கொடுத்து இன்னொன்றை வாங்கி கொள்வதாகும்.

உதாரணமாக, காட்டில் வசிப்பவர்கள் விறகு சுமந்துவந்து, கிராம மக்களிடம் கொடுத்து ஆகாரத்திற்கு வேண்டிய அரிசி பருப்பு முதலானவற்றை வாங்கிப் போவார்கள். ஆனால் இங்கு நடைபெறும் வியாபாரம் பக்தசிரோமணியான மாணிக்கவாசகருக்கும் அவரை ஆட்கொண்ட திருப்பெருந்துறையில் கோயில் கொண்டிருக்கும் சிவபெருமானுக்கும் இடையில் ஏற்படுகிறது.

நாணயங்கள் அறிமுகத்துக்கு வந்திருக்கும் இந்நாட்களில் கடைக்குப் போய்ச்சாமான்களை வாங்கிக்கொண்டு அதற்கு உரிய காசு கொடுத்து விடுகிறார்கள். ஆனால் சாமான்களைத் தரம் பார்த்து வாங்குபவன் திறமைசாலி ஆகிறான்.

கடைக்காரர்கள் தங்களிடத்தில் விலைபோகாதிருக்கும் தரக்குறைவான சாமான்களை, வருகிற ஏமாளிகளின் தலையில் கட்டிவிடவே முயற்சி செய்வார்கள். ஏமாளியான சீடன்

ஒருவனிடம் வியாபாரி ஒருவன் தரக் குறைவான சாமான் ஒன்றைக் கொடுத்தனுப் பியபோது ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்சர் வியாபாரிகளின் சுபாவத்தை மேலே கண்டவாறு சுட்டிக்காட்டுகிருர்.



இங்கு மணிவாசகப்பெருமான் திறமை சாலியான ஒருவராக இருந்து பண்டமாற்றுதல் செய்கிருர். ''தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னைச் சங்கரா ஆர்கொலோ சதுரர்'' என்ற சொற்றொடரில் தமது அனுபவமான திறமை வாய்ந்த வாணிபத்தைப் பகருகிருர்.

'சதுரர்' என்ற சொல் 'திறமைசாலி' என்று பொருள்படுகிறது. அடுத்து, அவர் எப்படி சதுரர் ஆனர் என்பது காணப்படுகிறது.

ஒரு வீட்டில் கசங்கிப்போய் அழுக்குபடிந்த ரூபாய்நோட்டு ஒன்று இருக்கிறது. அந்த வீட்டில் உள்ளவர்கள் எல்லோரும் ஒவ்வொரு வராக அந்த நோட்டைக் கடைக்கு எடுத்துப் போய், செலுத்தப் பார்த்துத் தோல்வியுற்றுத் திரும்புகிருர்கள். கடைசியாக ஒருவர் அதைக் கொண்டுபோய்ச் செலுத்தியதுமல்லாமல் அதற்கு நல்ல தரமுள்ள சாமானும் வாங்கி வந்து விடுகிருர். எனவே அவரை வீட்டிலுள் ளவர் சதுரர் என்று பாராட்டாமல் இருக்க முடியுமா?

இந்தக் கருத்தை, ''அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன் யாது நீ பெற்றது ஒன்று என்பால்'' என்ற திருவாக்கால் மாணிக்கவாசகர் விளக்குகிருர். தம்முடைய பொய்மையான ஜீவசொருபத்தை அவர் மதிக்கவில்லை. யானே பொய் என்றும், நாயில் கடையாய்க்கிடந்த அடியேன் என்றும் சொல்கிருர்.

எனவே மானுட ஜீவ வியக்தியைச் செல்லாக் காசுடன் ஒப்பிடுவது பொருத்தமாகும். இந்தச் செல்லாக்காசான ஜீவபோதத்தை ஒப்படைத்து அவர் பெற்றது என்ன? அந்தம் ஒன்று இல்லா ஆனந்தமாயிருக்கும் பரபோதமான சிவசொ ரூபத்தை அடைந்து விடுகிருர். சித்தமலம் அறுந்து அவர் சிவம் ஆகிவிடுகிருர். இந்த வாணிபத்தில் சுகத்தையே அள்ளி வழங்கும் சங்கரன் அடைந்தது என்ன? யாதுமில்லை. அவர் எப்போதும் ஆனந்த சொருபியாக இருந்தபடியே இருக்கிருர் ''யாது நீ பெற்றது ஒன்று என்பால்'' என்கிருர் இந்தச் சதுரர் வாதவூரர்.

ஒருவகையில், பகவானே ஏமாந்து போனவர் என்றும் சொல்லலாம். பக்தியின் வலையிலும் பக்தர்களின் அன்பெனும் பிடியிலும் அகப்பட்டு விடுகிருர். பிரம்மராயனின் பிரேமபக்தியில் கட்டுண்ட திருப்பெருந்துறைச்சிவன் அவருக் காகக் குதிரைச் சேவகனுக மதுரைக்குப் போகிருன். 'பொன்னுல் பிரயோஜனம் பொன் படைத்தாற்கு உண்டு, பொன்னுக்கு அந்த ஏது உண்டு' என்பது ஆப்தவாக்கியம். அங்ஙனம் பக்தன் தன்னைப் பகவானிடம் ஒப்படைக்கும் போது பேரானந்தம் என்னும் பிரயோஜனம் அடைகிருன். பகவான் அடைவது யாதும் இல்லை. எனவே பக்தன் சதுரன் என்னும் பட்டத்துக்கு உரிய கெட்டிக்காரன் ஆகிருன்.

மேலும் தன்நெஞ்சில் இமைப்பொழுதும் நீங்காது குடிகொண்டிருப்பதாக அந்தச் சிவனை ''சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான் திருப்பெருந்துறையுறை சிவனே'' என்று வழுத்துகிருர்.

சிவனே சிந்தையில் இருக்கும்போது ஜீவனுடைய நெஞ்சம் அவனுடைய கோயிலாகி விடுகிறது. உள்ளம் பெருங்கோயில் என்கிருர் திருமூலர்.

இப்படித் தன் ஊனுடம்பான ஆலயத்தில் இடம் கொண்டிருப்பதற்குத் தான் கைம்மாறு அளிப்பதற்குத் தன்னிடம் யாதுமில்லை என்பதையும், தன்னைக் கொடுத்தாலும் தான் அதற்குத் தகுந்த கைம்மாறு அல்ல என்ப தையும், ''எந்தையே ஈசா உடல் இடம்

[238 ஆம் பக்கம் பார்க்க]

# ஆன்மிக உரையாடல்

ஜூலை 3

எஸ்: ''ஐயா, தக்க கல்வியும் ஒத்த சூழ்நிலையும் பெற்றுவிட்டால் இருவேறு விதமான சந்தர்ப்ப நிலைகளில் பிறந்த இரு பாலர்கள் ஒரே போல வளர்ச்சி பெறுவார்கள் என்ற கருத்தைத் தெரிவிப்பதாக எலிஸாபத் ஹெமன்ஸின் கவிதைகளில் ஒன்று உள்ளது. அவர்கள் (மேல்நாட்டார்) முற்பிறவிகளால் ஏற்படுவதான சம்ஸ்காரங்களை நம்புவதில்லையே!''

சுவாமி துரியானந்தர்: ''நல்லது, ஆனால் இது (மேல் நாட்டாரின் கருத்து) எல்லா விஷயங்களிலும் சரிப்பட்டு வருகிறதா என்ன? சேர்ந்தே வசிக்கும் ஐந்து சிறுவர்களில் ஒவ்வொருவனிடம் ஒவ்வொரு விதமான குணசித்திரம்தான் காணப்படுகிறது. மேல் நாட்டினருக்குப் புனர் ஜன்மம் (மறுபிறவி) என்ற கருத்தே தெரியாது. அதனால் அவர்கள் பூர்வாசனைப்பற்றியும் புரிந்துகொள்ள முடிவதில்லை. இந்த உலகத்துக்கு வரும்போது எவனாவது எழுதாத வெற்றுக் காகிதத்தோடு (கர்மா மிகுதி இல்லாமல்) வருவதாக நீங்கள் நினைக்கிறீர்களா?''

இது தொடர்பான உரையாடலில் ஒருவர் டார்வின் கொள்கையைக் குறிப்பிட்டு, வேடிக்கையாக, நன்னடத்தை மிக்க ஒரு பிராம்மணப் பையனைக் குரங்கின் வழித் தோன்றல் என்று அழைத்தார்.

சுவாமி துரியானந்தர்: ''என்ன பிதற்றல்! அவன் ஏன் குரங்கின் வழி பிறந்திருக்க வேண்டும்? மேல்நாட்டார் காட்டும் 'அரிய புத்திசாலித்தனம்'தான் என்ன? விஞ்ஞானத்துக்கு உண்மையில் என்ன தெரியும்? இன்றைக்கு அது சில முடிவுகளுக்கு வருகிறது; இவற்றில் பெரும் பகுதி நாளைக்கே தகர்த்தப்படுகிறது. யாருக்கு விருப்பமோ அவர்கள் டார்வின் கொள்கையை ஏற்கட்டும். நம்மிடம் (ஹிந்துமதத்தில்) மனித சிருஷ்டியைக் குறித்து இரு கொள்கைகள் உள்ளன: ஒன்று, ஒரு ஜீவன் 84 லட்சம் விதமான ஜீவராசிகளாகப் பிறந்த பின்பே மானுட சரீரத்தைப் பெறுகிறது என்பது. இது பெருமளவுக்கு டார்வின் கொள்கைபோலவே தொனிக்கிறது. இன்னொன்று, பரம்பொருளிலிருந்தே (மானுடனின்) தோற்றுவாயைக் கூறுவது. சிருஷ்டி கர்த்தாவான பிரம்மா முதலில் சனத்குமாரர் போன்ற சில ஜீவர்களைப் படைத்து அவர்களை உலகில்படி வாழுமாறு கூறினார். நல்லது, அவர்கள் அப்போதுதான் நேராகப் பரம்பொருளிடமிருந்து தோன்றியவர்களாதலால் 'இதென்ன யோசனை? இந்த திட்டத்துக்கு நாங்கள் உட்பட மாட்டோம்' என்றனர். பிறகு பிரம்மா பிரஜாபதிகளை சிருஷ்டித்தார். அவர்கள் உலகியல் வாழ்வைத் தழுவ ஒப்புக் கொண்டனர். இது நமது அன்றாட வாழ்விலேயே நாமும்கூடப் பார்க்கும் ஒரு சாமானிய நிலவரம்தான். (அதாவது) இன்றைக்கும் பலர் பிறந்த நாளிலிருந்தே திருமணம், உலக வாழ்க்கை இவற்றைப் உபேக்ஷிப்பவர்களாக (பொருட்படுத்தாதவர்களாக) இருப்பதைக் காண்கிறோம். இவர்கள் குமாரர்கள் எனப்படுவார்கள். (ஹிந்துமதத்தில் மானுடப் படைப்புக் குறித்த) இந்த இரண்டாவது கொள்கை மிகவும் உயர்வாக உள்ளது. நாம் அமிருத புத்ரர்கள்; நாம் ஏன் வானரங்களின் வாரிசாக இருக்க வேண்டும்? யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி— 'பிரம்மத்தில் நாட்டம் கொண்டு பிரம்மசரியம் அனுஷ்டிக்கின்றனர்.' ஹோமா என்ற பறவையைக் குறித்து ஸ்ரீராமகிருஷ்ணரின் நீதிக்கதை நீங்கள் கேட்டதில்லை? இது வானவெளியிலேயே

முட்டை போடும். முட்டை விண்வெளியில் விழுந்து கொண்டிருக்கும்போதே குஞ்சு வெளிப்பட்டுவிடும். அந்தக் குஞ்சு விழுகையில் பூமியைத் தொடப்போகிற சமயத்தில் அதற்கு உயரே ஆகாயத்தே உள்ள தன் அன்னையின் நினைவு ஏற்படும். உடனே அது (பூமியில் படாமலே) நேராக உயரப் பறக்கத் தொடங்கும். அதன்பின் அது நிலத்தில் விழும் படி ஏற்படுவதில்லை. இதேபோல, பல ஜீவர்கள் சிறிது காலம் வளர்ந்தவுடனே உலகப் பற்றை முற்றும் விட்டு, இறைவனை நோக்கி நேராக விரைவு படுகிறார்கள்.

''(பையனிடம்) நீ சாதுவாக விரும்புகிறாயா, கிருகஸ்தனாக விருப்புகிறாயா என்று எனக்குச் சொல்.''

பையன்: ''நான் சாது ஆவேன்.''

சுவாமி துரியானந்தர்: ''நிச்சயமாக (ஆவாய்)! ஏன் ஆகமுடியாதாம்? இப்போ திருந்தே நீ முயற்சி செய்தால் நீ திண்ணமாக இறைவனை நேராக உணர்வாய். அவனை அனுபவித்தாக வேண்டும் என்ற திடசங்கல்பம் மனதில் இருக்கவேண்டும். இப்போதிருந்து இந்திரியங்களைப் பூர்ணமாகக் கட்டுப்படுத்தினாயாகில், ஈச்வரதரிசனம் அருளப் பெறுவாய். அல்லது, சாதரண மாந்தரைப்போல் வாழ எண்ணினாயானால், உனக்கு உண்ண ஏதோ கொஞ்சம் கிடைக்கும்; பிள்ளைகுட்டி பெறுவாய்; சிறிது பணம் காசு சேர்ப்பாய், அப்புறம் சாவாய்— அதோடு எல்லாம் முடிந்துபோகும். கிருகஸ்தன் என்ற அந்தஸ்து உனக்கு வேண்டுமா, அல்லது சாதுவாக விரும்பு கிறாயா?''

பையன்: ''சாதுகளுக்கு அந்தஸ்து இல்லையா என்ன? அவர்களுக்கும் இருக்கத்தான் செய் கிறது.''

சுவாமி துரியானந்தர்: ''நிச்சயமாக! சாதுக் களுக்கும் அந்தஸ்து உள்ளது. சுவாமிஜி (விவேகானந்தர்) பெற்ற கௌரவத்தைப் பார்! வீராதிவீரர் போல அவர் எப்படி உலகை வெற்றி கொண்டார்! அவரது இயல்பிலேயே எத்தனை கம்பீர உயர்வு! இந்திரியங்களை வெல்வத்தில் எத்தனை பூர்ணமான திறம்.! அவரைப்போல் ஒருவன் இருந்துவிட்டால் அவன் சகலமும் சாதித்து விட்டான் என்றும். அவர் காம உணர்ச்சியிலிருந்து அறவே விடுபட்டிருந்தவர். அவரது மனம் உயர் பொருள்களிலேயே சுருதி கூட்டப்பட்டிருந்ததால் அது கீழ் மட்டங்களுக்கு இறங்கி வரும் வாய்ப்பே காணவில்லை. சாமானிய மாந்தரின் மனம் பொதுவாக முதுகெலும்பின் கீழ் மூன்று கேந்திரங்களுக்குள்ளே முடங்கிக் கிடப்ப தென்றும், ஆன்ம சாதகனின் மனம் (அவற் றுக்கு மேல்) இதய மத்திக்கு எழும்புகிற தென்றும், அது மேலும் உயர்ந்து கண்ட மத்திக்கு ஏறி, முடிவாகப் பிறகு சிரஸின் மையத்தை அடைகிறதென்றும், அப்போது அவன் (பரம்பொருளிடம் முற்றும் ஒன்றிய) சமாதி நிலையை எய்துகிறான் என்றும் ஸ்ரீராம கிருஷ்ணர் கூறுவது வழக்கம். அதன்பின் மூன்று வாரங்களுக்குள் சரீரம் சாவு அடையும். ஸ்ரீராம கிருஷ்ணர் இன்னொன்றும் சொல்வார். அதாவது, குழியில் கிடந்தாலும், அறையில் வைத்துக் காக்கப்பட்டாலும் தங்கம் தங்கமே என்பார். ஒருவனிடம் உயர்ந்த சக்தி உள்ளூற இருப்பின், அவனை எங்கே வைத்தாலும் அந்தச் சக்தி வெளிப்படும். இறைவனை நம்பு; பக்தி வேண்டி அவனிடம் பிரார்த்தனை செய்.

''(எஸ்ஸை நோக்கி) இவன் (அதாவது, பையன்) சிவனிடமிருந்து பாசுபதாஸ்திரம் பெற விரும்புகிறான்.

''(பையனைப் பார்த்து) பாசுபதாஸ்திரத்தை வைத்துக்கொண்டு நீ என்ன செய்வாய்? நீ க்ஷத்திரியனல்ல; பிராம்மணன். நீ ஈசனைப் பிரீதி செய்து பிரம்மஞானத்தையே கோர வேண்டும்; பிரம்மணனுக்கு அதனிலும் வலிய ஆயுதமில்லை. உனக்கு வஸிஷ்ட — விச்வாமித்திரர் கதை தெரியுமோ? மன்னனாக இருந்த விச்வாமித்திரர் வில்லும் அம்பும் பூண்டு வந்து ஒரு நாள் வஸிஷ்டரின் நூறு பிள்ளைகளைக் கொன்று, அவரது காமதேனு என்ற பசுவையும் கவர்ந்து சென்றார். ஆனால் வஸிஷ்டரோ இதனைத் தையும் கண்முன் கண்டும், ஏதும் சொல்லாமல் தமது பிரம்ம தண்டத்தைக் கையில் வைத்துக் கொண்டு அமைதியாய் அமர்ந்திருந்தார். பின்னர் விச்வாமித்திரர் கை கூப்பி வஸிஷ்

டரின் பாதத்தில் விழுந்து, 'க்ஷத்திரிய வீரத்தைத் தூர எறிந்துவிடுகிறேன். பிராம்மணருக்கு உடைமையாயுள்ள பலமே (ஆடாத மனச் சாந்தியே) உண்மையான பலம்' எனக் கூறி மன்னிப்புக் கோரினர்.''

பையன் தனது மாலைப் பிரார்த்தனை புரிய வேண்டி விடைகோரிப் பெற்று அகன்றுன். அப்போது சுவாமி துரியானந்தர் சொல்வார்:

''இந்தப் பையன் உத்தமமான பூர்வ சம்ஸ்காரங்களைப் பிறப்பிலேயே பெற்றிருக்கிருன். இவனிடம் சத்துவம் நிறைந்துள்ளது; அதில் சற்றே ரஜஸ்ஸும் கலந்துள்ளது. 'ஏ'யிடமே முற்றிலும் சத்துவமே உள்ளது. இந்தப் பையன் தூயவாழ்க்கை நடத்தினுல் நல்ல முன்னேற்றம் காணுவான். அல்லாவிடில் இவன் ஏனைய சாமானியச் சிறுவர்களின் கதியையே அடைவான். அதுவும் பூர்வத்தில் நிர்ணயிக்கப்பட்டுவிடவில்லை. ஒருவிதத்தில் அனைத்துமே நமது சொந்த முயற்சியைச் சார்ந்ததுதான். 'யோகவாசிஷ்டம்' இதனை வெகுவாகப் போற்றியுள்ளது. இதனுல் விதி என்பதே ஒரு கட்டுக்கதைதான் என்று நான் சொல்வதாக அர்த்தமில்லை. தைவம் நிஹத்ய குரு பௌருஷம் ஆத்மசக்த்யா- 'உன் சொந்தச் சக்தியால் விதியை விரட்டி உன் ஆண்மையை வெளிப்படுத்துக.' புருஷயத் தனம் நிறைந்த ஒருவனுக்கு விதியும்கூட அனுகூலமாகும். நமக்கு நாமே உதவி புரிந்துகொள் வோருக்குக் கடவுளும் உதவுகிருர். விதியையே சார்ந்திருக்கும் மக்கள் பெரும்பாலும் தாழ்மையே அடைகிருர்கள். சுதந்திர சங்கற்பமே என்பதும் புருஷயத்தனத்தில் உள்ளடங்கியதேயாகும். தம்முடைய குற்றத் தினுலேயே மக்கள் தவறுகள் செய்துவிட்டுப் பிறகு விதியின்மேல் பழி போடுகிருர்கள். போகிற வழியில் தடுக்கிக்கொள்வதென்பது எப்போதோ அகஸ்மாத்தாக நிகழ்வதுதான்— மேலே மேலே போவதே இயற்கையான போக்கு; தவறுதல்கள் செய்வதும் எப்போதோ நிகழ்வதுதான் — மேலே மேலே எழும்புவதே இயற்கைப் போக்கு.''

எஸ்: ''ஒரு கத்திரியின் இரு வெட்டுப் பாகங்களில் எது வெட்டுகிறது என நமக்குத் தெரிவதில்லை. அதுபோல் விதி, புருஷயத்தனம் என்ற இரண்டில் எது ஒரு காரியத்தைச் சாதிப்பதற்கு, எந்த அளவில், பொறுப்பேற்கிறது என்று நாம் உறுதி செய்துகொள்ள முடியவில்லை. ஆனுலும் நாம் இரண்டும் சமப் பொறுப்புப் பெற்றவை என்று சகஜமாக வைத்து வைத்துக்கொண்டு விடுகிறோம். விதி நம்மை விடுவித்து உதவவேண்டுமெனக் காத்துக் கிடப்பதைவிடப் புருஷயத்தனம் செய்வதே நம் கடமை; இது நம் கட்டுப்பாட்டில் இருப்பது.''

சுவாமி துரியானந்தர்: ''ரொம்பவும் சரி. இதுவே உபாயம். இம்மாதிரி ஒருவன் செயற்பட்டாலன்றி எதுவுமே செய்ய முடியாது. ஆனுல் எல்லாவற்றுக்கும் அப்பால் இறைவன் விட்ட வழி என்று விலகி நிற்பதாக ஒன்று உள்ளது. 'உன் சங்கற்பப்படியே நடக்கும்' என்பது [இறைவனிடமே விட்டுக் கொடுப்பது] பலவீனம் அன்று.'' ☆

---

[235ஆம் பக்கத் தொடர்ச்சி]

கொண்டாய் யான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே'' என்ற திருவாசகரால் திருவாய் மலர்ந்தருளுகிருர். தம்மையே முற்றும் ஈசனிடம் ஒப்படைத்த பிறகு, தம்மிடம் எஞ்சியிருப்பது யாது? தம்மை ஒப்படைக்கும்போது யான் எனது என்ற அகங்கார மமகாரம் முழுவதும் அழிந்து விடுகிறது. பொய்மையான ஜீவ போதமாயுள்ள அகங்கார மமகாரம் தேய்ந்து அழியும்போது அது இருந்த இடத்தில் சிவபோதமான மெய்ப்பொருள் மிளிர்கிறது.

தன்னைக் கொடுத்துத் தலைவனை அடைந்திடில் பின்னைப் பெறுவது பேரின்ப வாழ்வே.

இந்தக் கருத்துக் கொண்ட திருவாசகம் வருமாறு:-

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்?
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்
இயாதுநீ பெற்றதொன் றென்பால்
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான
திருப்பெருந் துறையுறை சிவனே
எந்தையே ஈசா உடலிடங் கொண்டாய்
யானிதற் கிலனோர்கைம் மாறே. ☆



# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை - 600004

## 1980 ஜூலை மாத நிகழ்ச்சிகள்

சத்சங்கம் : ஞாயிறுதோறும் (மாலை 4 மணி முதல் 4-30 மணி வரை)
ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாம பாராயணம் (6-7-80 & 20-7-80)
ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாம பாராயணம் (13-7-80)
4-30 மணி முதல் 5-30 மணி வரை—சொற்பொழிவு (தமிழ்)

| | | |
|---|---|---|
| 6—7—80 | 1. | பாகவதம்—திரு 'அண்ணு' சுப்ரமண்யம் |
| 13—7—80 | 2. | ஸ்ரீ விஷ்ணு ஸகஸ்ரநாமம்—திரு வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் |
| 20—7—80 | 3. | ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாமம்—திரு வி. எஸ். வி. குருசாமி சாஸ்திரிகள் |

மாலை 5-35 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி கபீரானந்தர் அவர்கள் ஸ்ரீமத் பகவத்கீதை என்ற தலைப்பில் ஜூலை 6, 13, 20 ஆகிய தேதிகளில் ஆங்கிலத்தில் சொற்பொழிவு நிகழ்த்து வார்கள்.

வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-45 மணிக்கு)

| | | |
|---|---|---|
| 1. | திங்கள் | ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்—சுவாமி அமிர்தானந்தர் |
| 2. | செவ்வாய் | பக்தியோகம்—சுவாமி கபீரானந்தர் |
| 3. | புதன் | பஜனை |
| 4. | வியாழன் | விவேக சூடாமணி— திரு 'அண்ணு' சுப்ரமண்யம் |
| 5. | வெள்ளி | ஆன்மிக வாழ்க்கை—சுவாமி கமலாத்மானந்தர் |
| 6. | சனிக்கிழமை | (5—7—80 மட்டும்) அத்யாத்ம ராமாயணம் —ஜஸ்டிஸ் பி. ராமகிருஷ்ணன், ஐ. சி. எஸ். (ரிடையர்டு) |
| 7. | சனிக்கிழமை | (12—7—80 மட்டும்) ஸ்ரீ ஆஞ்சநேயர்—ஆர். கோதண்டராமன் |
| 8. | சனிக்கிழமை | (19—7—80 மட்டும்) வால்மீகி ராமாயணம் —டாக்டர் என். வீழிநாதன் |

வேறு சில நிகழ்ச்சிகள் :
28—7—80 திங்கள்: குருபூர்ணிமா

8—7—80 & 23—7—80 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீ ராம நாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

13—7—80 மாலை 5-30 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள் என்ற தலைப்பில் சுவாமி கீர்த்திதானந்தர் அவர்கள் உரை நிகழ்த்துவார்கள். இடம்: 7, கெல்லீஸ் ரோடு, கீழ்ப்பாக்கம்.

4, 11, 18, 25 ஆகிய தேதிகளில் மாலை 6-15 மணிக்கு சுவாமி ராகவேசானந்தர் அவர்கள் ஸ்ரீ லலிதா ஸகஸ்ரநாம பாராயணமும், பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர் என்ற தலைப்பில் சொற் பொழிவும் நிகழ்த்துவார்கள். இடம்: 18, 9-ஆவது லேன், சாஸ்திரி நகர்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தொலைபேசி : 71231

தலைவர்,
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.

ஆசிரியர்:- சுவாமி தன்மயானந்தர். துணை ஆசிரியர்: சுவாமி கமலாத்மானந்தர்
பதிப்பாளர்:- சுவாமி தன்மயானந்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004.
அச்சிடுவோர்:- K. L. செல்லப்பன், சுத்தானந்தா அச்சகம், சென்னை-600 020.